# முல்லைப் பாட்டு
# ஆராய்ச்சி அகராதி



திரு. தி. சு. பாலசுந்தரம் பிள்ளையவர்கள்
தொகுத்தமைத்தது.



 [ விலை அணா 8

# இந் நூலில் அடங்கியவை

# குறிப்பு :-

இந் நூலின் பொருட்குறிப்பகராதிக்குக் கொள்க.

| | | | |
|---|---|---|---|
| 'அதிரல்' | என்பதற்கு | 'மோசிமல்லிகை' | என்பது பார்க்க |
| 'அருப்பம்' | ,, | 'வேட்டுவச் சாதி' | ,, |
| 'உலைக் கூரை' | | 'கூரை' | ,, |
| 'கன்னல்' | ,, | 'நாழிகை வட்டில்' | ,, |
| 'காடு' | ,, | 'புறவு' | ,, |
| 'காயா' | ,, | 'காசாஞ் செடி' | ,, |
| 'கோடல்' | ,, | 'காந்தள்' | ,, |
| 'திரிக்குழாய்' | ,, | 'நெய்யுமிழ் சுரை' | ,, |
| 'படாம் வீடு' | ,, | 'கூடாரம்' | ,, |
| 'பாடி வீடு' | ,, | 'பாசறை' | ,, |
| 'மூடங்கிறை' | ,, | 'கூடல்வாய்' | ,, |
| 'மெய்ப்பை' | ,, | 'சட்டை' | ,, |
| 'வயிர்' | ,, | 'கொம்பு ஊதுதல்' | ,, |
| 'வளை' | ,, | 'சங்கு ஊதுதல்' | ,, |
| 'வேழம்' | ,, | 'யானை' | ,, |

---

சென்னைப் பல்கலைக் கழகத்
தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர்
(Reader in Tamil, University of Madras)
ராவ்சாஹிப்
S. வையாபுரிப் பிள்ளை B.A., B.L. அவர்கள்

# அணிந்துரை

திரு இளவழகனார் இயற்றிய 'முல்லைப் பாட்டு ஆராய்ச்சி அகராதி'யைப் பார்வையிட்டேன். பண்டைத் தமிழிலக்கியங்களிற் பயிற்சி சிறத்தற்கும், அவற்றுள் உரையில்லாதிருப்பனவற்றுக்கு எளிதில் உரை கண்டு இன்புறுதற்கும், இதுபோன்ற அகராதி மிகப் பயன் படுவதாகும். நமது செழுந் தமிழ்மொழி பெருஞ் சிறப்புற்று விளங்கிய பண்டைக்காலத்தே அதன் சொல் வளம் இனையதென்று அறிதற்கும், அச் சொற்களுள் ஏற்புடையனவற்றை இக் காலத்தும் வழங்குமாறு தெரிந்துகோடற்கும் இவ்வகராதி பெரிதும் உதவுவதாகும். அன்றியும், நமது பண்டைப் பெருநூல்களிற் கூறப்பட்டுள்ள பொருள்களை ஒருசேரத் தொகுத்துணர்

தற்கும் இதுபோன்ற அகராதி இன்றியமையாததாகும். சுருங்கக் கூறின், தமிழுணர்ச்சி நிரம்புதற்கு இது போன்ற அகராதிகள் தக்க கருவியாமெனக் கருதுகின்றேன்.

இதனை இயற்றியவரது நன்முயற்சி தமிழ் மக்களாற் பெரிதும் பாராட்டத் தக்கது. இவர்க்கு மேன்மேலும் ஊக்கமளிப்பது தமிழ் மக்களுடைய கடமையாகும்.

மயிலாப்பூர்,
6-9-39.

எஸ். வையாபுரிப் பிள்ளை.

# முன்னுரை

செந்தமிழ் மொழியிலுள்ள சொற்கள் உயர்ந்த பொருட்காரண அமைப்புகள் வாய்ந்து, ஆராய்ச்சி வல்ல தூய சான்றோர்களுக்கு எஞ்ஞான்றும் உவரா அமிழ்த மாகச் சுவையாநின்றன. ஆராய ஆராயத் தெளிந்த ஊற்று நீர்போற் செறிந்த பொருள் சுரக்கின்றது. தமிழ் மொழியிற் பல்லாயிரக்கணக்கான சொற்கள் இங் ஙனங் காணப்படுகின்றன.

தவத்தால் மனந் தூயரான அருட் சான்றோர்க ளும், நுண்ணுணர்வாற் கலைத்திறம் மிகப்பெற்ற பெரும் புலவர்களும், வாளாற்றலால் அறம் வழுவா துலகாண்ட பேரரசர்களும், தாளாற்றலாற் பெருவளந் தொகுத்து உளமுருகி வழங்கிய அருள் வள்ளல்களும், பிறருந் தமிழ் மொழியைப் பன்னெடுங்காலமாகவே உளமார நாவார ஆண்டு நுகர்ந்து மேன்மேலும் வளம் படுத்தியிருக்கின்றனர். இதனால், அவர்களுடைய பல திறமான உயர்ந்த உணர்ச்சிகளெல்லாம் செந்தமிழ்ச் சொற்களில் நிலைபெற்று என்றும் அழியாமற் சுடர்ந்து

நிற்கின்றன. ஆகவே, தமிழ்ச் சொற்கள் அத்தனையும் நல்ல நாகரிகக் கருத்துகள், கலைக் கருத்துகள், அரசியற் கருத்துகள், வாழ்க்கைமுறைக் கருத்துகள் முதலியவற்றைத் தெளிவாக விளக்கிக் காட்ட வல்ல நிலையான அடையாளங்களாகவும், தமிழ் நாட்டின் அழியாத வளர்பொருள்களாகவும் திகழ்கின்றனவென்பது நன்கு பெறப்படுகின்றது.

சொற்கள் வாயிலாக இங்ஙனம் வெளிப்படுங் கருத்துகள் இன்ன என ஒழுங்காகத் தெரிந்துகொள்வதற்கு, அச்சொற்கள் அவ்வப்பொருளில் வழங்கிய காலமும் அதனியல்புகளும் இன்னவென முதன்மையாகத் துணிந்துகொள்ளவேண்டியிருக்கின்றது. இதனால் வெளிப்படக்கூடிய தமிழ்நாட்டு உண்மைகள் எத்தனையோ பலவாம். தமிழகத்தை மேன்மேலும் விளக்கமுறச் செய்வதற்கு இத்தகைய ஆராய்ச்சிகள் எவ்வளவுதான் பேருதவியாயிருக்குமென்பதை அறிஞர்கள் அறிந்தேயிருக்கின்றனர்.

ஆனால், இதற்கு எடுக்கவேண்டிய முயற்சியும் உழைப்பும் மிகுதி; மனத்தூய்மையும், நுண்ணுணர்வும், பொறுமையும், உழைப்பும், தன்னல இழப்பும்,

துணிவும், சிறந்த புலமைத்திறமு முள்ள சிலரேனுந் தமது பிறவியை இதற்கெனவே ஒதுக்கிவைத்து இடையறுது பணி புரிய முன் வருதல் வேண்டும். ஏனையோர் அவரவராலான நல்லுதவிகளைச் செய்து வந்தாற் போதும்.

" தங்கி மிகாமை வைத்தான் தமிழ்ச் சாத்திரம்" என்னுந் திருமூலர் திருமந்திரத்துக் கேற்ப நமக்குக் கிடைத்துள்ள நல்ல தமிழ் நூல்கள் சிலவேயாம். அவைகளுள்ளும், தொல்காப்பியம், பத்துப்பாட்டு, புறநானூறு, கலித்தொகை, திருக்குறள் போன்ற சில நூல்கட்கேனும் சொல்விடாத அகராதிகள் பழைய உரைக் குறிப்புகளுடன் உருவாக்கிக் கொள்ளுதல் முதன்மையாயிருக்கின்றது. 'இன்ன சொல் இன்ன காலத்துச் சொல்; இன்ன பொருளில் இன்ன நூலில் வழங்கியிருக்கின்றது' என்று எளிதாகத் தெரிந்து கொள்வதற்கு இவை உதவியாயிருக்கும். ஒரு சிறிய எளிய சொல்லும் விடாமல் எல்லாம் தொகுக்கப்பெறுதல் வேண்டும். இந்த அகராதியில் ஒரு சொல் காணப் படவில்லையென்றால், அச் சொல் அந்த நூலிலும் இல்லையென்று திட்டமாகத் துணிதற்கு இடமிருக்க

வேண்டும். அப்போதுதான் ஆராய்ச்சி தங்கு தடையில்லாமல் திருகிச் செல்லும். அறிஞர்கட்கும் வீண் காலப்போக்கிராது. இப்போது நூல்களில் இணைக்கப்பட்டிருக்கும் அகராதிகளெல்லாம் எல்லாச் சொற்களும் விடாது திரட்டப்படாமல் அருஞ்சொல் அகராதிகளாயிருக்கின்றமையால் இவற்றைக்கொண்டு மேற்கண்டவாறெல்லாந் துணிவதற்குக் கூடவில்லை. இனி, இன்றுகாறும் வெளிவந்துள்ள பொது அகராதிகளிலும், ஒரு பழைய சொல்லின் ஆட்சிக்கு மிகப் பிற்பட்ட நூல்களிலிருந்தும் மேற்கோள் காட்டியிருத்தலால், அவைதாமும், இன்ன சொல் இன்ன பொருளில் இவ்வளவு பழமையான வழக்குடையது எனத் துணிவதற்குப் பயன்படவில்லை.

இனி இங்ஙனமே பொருட் குறிப்புகள், இலக்கணக்குறிப்புகள், கலைக்குறிப்புகள், சொற்பொருட்காரணக்குறிப்புகள் முதலியவற்றின்மேலும் இயன்றவரையில் விடாமல் அகராதிகள் அமைவது ஆராய்ச்சிக்கு மிக உதவியாயிருக்கும்.

பெரிதும் அறிவு உழைப்பெடுத்துப் புதியவர்கக் கருத்துகளை நுணுகி ஆராய்ந்து அரிதின் எழுதும் சில

நறுநூல்களுக் கிடையே அத்துணை அறிவு உழைப்பில்லா மற்றொரு வகையான எளிய நூல் அலுவல் இருப்பதொன்றெனக் கருதியபோது, பழைய பெரு நூல்களைக் கூட்டல், குறைத்தல், மாற்றல், மறுத்தல் முதலியன இல்லாமல் உள்ளது உள்ளவாறே திரட்டுகின்ற இவ்வலுவலை மேற்கொள்ள விரும்பி, முதலில் 'தொல்காப்பியம்', 'பத்துப்பாட்டு' என்னும் இரண்டு பெருநூல்கட்கும் இங்ஙனம் அகராதிகள் தொகுக்க நேர்ந்தது; ஆனால், மேன்மேல் இவற்றில் உள்ளுஞ் செல்லச் செல்ல இவைதாமும் பேர் அறிவு உழைப்பிற்குரிய அரிய அலுவல்களாகவே காணப்படுகின்றன.

பத்துப்பாட்டில் 'திருமுருகாற்றுப்படை அகராதி' தொகுக்கப்பெற்று அதன் ஒரு பகுதியான சொற்குறிப்பகராதிமட்டும் அச்சாயிற்று. இனிப் பொருட்குறிப்பகராதி முதலியன அச்சாகவேண்டும்.

தமிழ்மொழி வளர்ச்சியிலும், தமிழ் மக்கள் வளர்ச்சியிலும், தமிழ்க்கலை வளர்ச்சியிலும் உறுதியான ஊக்கங்கொண்டு இடையறாமலும் சலியாமலும் நீண்டகாலமாகவே அரும்பெருந் தொண்டு ஆற்றிவருபவர்களும்,

தமிழகத்தின் தனிப்பெருந் தலைவர்களும், இனிய பெரும்போக்குள்ளவர்களுமான திருவாளர் C. D. நாயகம் அவர்கள் [ Retired Deputy Registrar of the Co-operative Societies ] தமிழ் மொழியிற் சில அடிப்படையான நற்றொண்டுகள் நடைபெறவேண்டுமென்பதிலும், தமிழ்ச் சொற்களின் பொருட்காரண அமைப்புகளிலும் மிகக் கருத்துள்ளவர்களாதலால், இப்போது இப் பத்துப் பாட்டு அகராதிகளை நான் தொகுத்துவருதல் அறிந்தவும், இவை வெளிவருதலில் மிக்க ஆர்வங்காட்டி, என்பால் மிகக் கனிவுகொண்டு, இம் 'முல்லைப்பாட்டு ஆராய்ச்சி அகராதி' வெளிவருவதற்குரிய அச்சுச்செலவு முழுமையுந் தாம் ஒருவராகவே, ஏற்றுதவுவதாகக் கூறி, அங்ஙனமே உடனே அளித்துதவினார்கள். அதனால் இந்நூல், 'திருமுருகாற்றுப்படை அகராதி'க்குமுன், உடனே வெளிவருவதற்கிடமாயிற்று; இது தகுந்த அறம் எனக் கருதி எனக்கு ஒரு சிறிதும் முயற்சியில்லாதபடி எதிர்பாரா உதவியாய் உடனுதவிய இப்பெரியாரது பேரன்பின் திறத்தை நான் எங்ஙனங் கூறி எங்ஙனம் அமைவேன்! நாட்டில் நற்செயல்கள் தடையின்றி நிகழவேண்டும் என்னும்

நல்லெண்ணத்தோடு மகிழ்ச்சியின் ஆற்றிய இவ்வுதவி என் நெஞ்சத்தைவிட்டு எஞ்ஞான்றும் அகலாது. இப் பெரியாரவர்கள்பால் நான் என்றும் நன்றியறிவுடையேன்.

'முல்லைப் பாட்டு' என்பது, பத்துப்பாட்டு என்னும் கடைச்சங்க நூலைச் சேர்ந்தது. பகைமேற் பிரிந்து சென்ற தலைவன் திரும்பி வருமளவும் தலைவி தனது இல்லத்தில் காத்திருத்தலாகிய ஒழுக்கததை விளக்கிக் காட்டுவது. இவ்வொழுக்கத்தையே ஆசிரியர்கள் முல்லையொழுக்கமெனக் கூறுகின்றனர். அதனாற்றான் இந்நூல் 'முல்லைப் பாட்டு' எனப்பட்டது.

இதனை இயற்றியளித்த புலவர் பெருமான் காவிரிப்பூம் பட்டினத்துப் பொன் வாணிகனார் மகனார் ஆசிரியர் நப்பூதனாராவர்.

பொதுவாகவே, ஒருவருக்காக ஒருவர் காத்திருப்பதென்பது அந் நேரத்திற் பெருந் துன்பமாயிருக்கும். காதலர்க்கோ, இத் துன்பம் இன்னும் மிகுதி; அவ் வுணர்ச்சியை இந் நூலாசிரியர் மிகக் கவர்ச்சியான முறையில் வல்லவாறெல்லாம் அழகாகச் சித்திரித்

துக் காட்டியிருக்கின்றார். இன்னும், அதற்கியைபான கார்காலத் தியல்பு, மாலைக்காலத் தன்மை, முல்லை நிலத்துக் கருப்பொருள், தலைவன்றன் வீரம், அவன் பகைப் புலத்தில் அமைத்திருக்கும் பாசறையின் அமைப்பு, அங்குள்ளோரது நிலைமை, தமிழகத்துப் பழக்க வழக்கங்களிற் சில முதலிய பிற பொருள் விளக்கங்களும் இலக்கிய ஓவியமே என இதன்கண் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன.

தமிழ்ச் சுவையோடு கற்க வல்ல நுண்ணறிவுடையார்க்கு இந் நூல் மிகச் சுவையாயிருக்கும்.

இந் நூலகராதியை நான் தொகுத்தமைப்பதற்கு, இதன் சொற்குறிப்பகராதிக்காக, முதலில் இதன் சொற் குறிப்புகளை வரிசையாகத் திறமையுடன் எழுதியுதவியவர் என் இளவலும், தமிழ்ப் பயிற்சியுள்ளவருமான தி. சு. வேதாசலம் என்பவராவர். இவரது தமிழ் வேட்கை பெரிது. உடம்பு நலங்குன்றியிருந்த காலங்களிலும் இதனைத் தொடர்ந்தெழுதி முடித்த ஊக்கவுள்ளம் மிகப் பாராட்டுதற்குரியதாயிருக்கின்றது. இவரது மேன்மேல் நலங்கட்குப் பெரிதும் விரும்புகின்றேன்.

இம் முல்லைப் பாட்டின் சொற்களுக்கு உரையாசிரியர் நச்சினார்க்கினியருடைய உரைக் குறிப்புகள் கொடுக்கப்பெற்றிருக்கின்றன. பல்லாவரம் பொது நிலைக் கழகத் தலைவர்களும், அடியேற்கு மிக்க அருளோடு தமிழ்ச் செவியறிவுறுத்தியவர்களுமான ஆசிரியர் மறைமலையடிகளும் இதற்கோர் அரிய ஆராய்ச்சியுரை எழுதியிருத்தலின், முதன்மையான இடங்களில் அவர்களுரைக்குறிப்புகளுங் குறிக்க விரும்பி அவர்களை வேண்டிக்கொண்டபோது, அவர்கள் பேரன்புடன் அதற்கு இசைந்தருளினார்கள். இங்ஙனமே அவர்கள் ' பட்டினப் பாலைக்கு' எழுதியிருக்கும் நுண்ணிய உரைக் குறிப்புகளும் அந் நூலகராதியிற் குறித்துக் கொள்ள இசைந்திருக்கின்றார்கள். அவர்கள் தண்ணருட்குத் தமிழகம் பெரிதுங் கடமைப்பட்டிருக்கின்றது.

தமிழ் மக்கள், அறிவிலும் அரசிலும் பொருளிலும், அன்பின்பங்களிலும் மேலுஞ் சிறந்து விளங்குதற்கு அவர்கள் தமிழ் மொழி முதலிற் சிறந்து விளங்குதல் வேண்டும். தமிழ் மொழி அங்ஙனம் விளங்குவதற்கு அதன்கண் உள்ள நல்ல நூல்களெல்லாம் நன்கு

விளக்கம் பெறுதல் வேண்டும். புதியவாகவும் பல நல்ல நூல்கள் வெளிவரல் வேண்டும். இவற்ருலெல்லாம் மக்கள் அறிவு விளக்கத்திற் சிறப்படைவர். அடிப்படையான இந்தக் கடைகால்களை நன்கமைத்துக் கொள்வது, மேற், கட்டிடங்களெழுப்புதற்கு மிக இன்றியமையாததாகும். தமிழ்த் தலைவர்களும், மக்களும் இப்பணிகட்கு எவ்வளவு ஆதரவும் உதவியும் நல்குகின்ருர்களோ, அவ்வளவு விரைவில் தமிழகம் சிறந்து மிளிருமென்பது சொல்லாமலே விளங்கும். முதன்மையான நற்செயல்கள் இவையெனத் தெரிந்து, அவற்றை ஆற்றுங் கடமையிலன்ருே தமிழ் நாடு இப்போது உளது!

இளவழகன்.

## நப்பூதனார் இயற்றிய

# முல்லைப் பாட்டு

நனந்தலை யுலகம் வளைஇ நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல் போலப்
பாடுஇமிழ் பனிக்கடல் பருகி வலன்ஏர்பு
கோடுகொண் டெழுந்த கொடுஞ்செலவு எழிலி
பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை,
அருங்கடி மூதூர் மருங்கின் போகி,
யாழிசை இனவண்டு ஆர்ப்ப நெல்லொடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
அரும்புஅவிழ் அலரி தூஉய்க் கைதொழுது
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்பச்,
சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்
உறுதுயர் அலமரல் நோக்கி ஆய்மகள்
நடுங்குசுவல் அசைத்த கையள் கைய
கொடுங்கோல் கோவலர் பின்நின்று உய்த்தர
'இன்னே வருகுவர் தாயர்' என்போள்
நன்னர் நன்மொழி கேட்டனம் அதனால்
நல்ல நல்லோர் வாய்ப்புள் தெவ்வர்

முனைகவர்ந்து கொண்ட திறையர் வினைமுடித்து
வருதல் தலைவர் வாய்வது நீநின்
பருவரல் எவ்வம் களைமா யோய்எனக்
காட்டவும் காட்டவும் காணாள் கலுழ்சிறந்து
பூப்போல் உண்கண் புலம்புமுத்து உறைப்பக்
கான்யாறு தழீஇய அகல்நெடும் புறவின்
சேண்நாறு பிடவமொடு பைம்புதல் எருக்கி
வேட்டுப்புழை அருப்பம் மாட்டிக், காட்ட
இடுமுள் புரிசை ஏம்உற வளைஇப்
படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி,
உவலைக் கூரை ஒழுகிய தெருவில்
கவலை முற்றம் காவல் நின்ற
தேம்படு கவுள சிறுகண் யானை
ஓங்குநிலைக் கரும்பொடு கதிர்மிடைந்து யாத்த
வயல்விளை இன்குளகு உண்ணாது நுதல்துடைத்து
அயில்நுனை மருப்பின்தம் கையிடைக் கொண்டெனக்
கவைமுள் கருவியின் வடமொழி பயிற்றிக்
கல்லா இளைஞர் கவளம் கைப்பக்,

கல்தோய்த்து உடுத்த படிவப் பார்ப்பான்
முக்கோல் அசைநிலை கடுப்ப நல்போர்
ஓடா வல்வில் தூணி நாற்றிக்
கூடம் குத்திக் கயிறுவாங்கு இருக்கைப்
பூந்தலைக் குந்தம் குத்திக் கிடுகுநிரைத்து
வாங்குவில் அரணம் அரண மாக
வேறுபல் பெரும்படை நாப்பண் வேறுஓர்
நெடுங்காழ்க் கண்டம் கோலி அகநேர்பு
குறுந்தொடி முன்கைக் கூந்தலம் சிறுபுறத்து
இரவுபகல் செய்யும் திண்பிடி ஒள்வாள்
விரவுவரிக் கச்சின் பூண்ட மங்கையர்
நெய்உமிழ் சுரையர் நெடுந்திரிக் கொளீஇக்
கைஅமை விளக்கம் நந்துதொறும் மாட்ட
நெடுநா ஒள்மணி நிழத்திய* நடுநாள்,
அதிரல் பூத்த ஆடுகொடிப் படாஅர்
சிதர்வரல் அசைவளிக்கு அசைவந் தாங்குத்
துகில்முடித்துப் போர்த்த தூங்கல் ஓங்குநடைப்
பெருமூ தாளர் ஏமம் சூழப்,
பொழுதுஅளந்து அறியும் பொய்யா மாக்கள்

* 'நிழற்றிய' எனவும் பாடமுண்டு.

தொழுது காண்கையர் தோன்ற வாழ்த்தி
எறிநீர் வையகம் வெலீஇய செல்வோய்நின்
குறுநீர்க் கன்னல் இனைத்துஎன்று இசைப்ப,
மத்திகை வளைஇய மறிந்துவீங்கு செறிவுடை
மெய்ப்பை புக்க வெருவரும் தோற்றத்து
வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்
புலித்தொடர் விட்ட புனைமாண் நல்இல்
திருமணி விளக்கம் காட்டித் திண்ஞாண்
எழினி வாங்கிய ஈரறைப் பள்ளியுள்,
உடம்பின் உரைக்கும் உரையா நாவின்
படம்புகு மிலேச்சர் உழையராக,
மண்டுஅமர் நசையொடு கண்படைபெறாஅது
எடுத்துஎறி எஃகம் பாய்தலின் புண்கூர்ந்து
பிடிக்கணம் மறந்த வேழம் வேழத்துப்
பாம்புபதைப் பன்ன பரூஉக்கை துமியத்
தேம்பாய் கண்ணி நல்வலம் திருத்திச்
சோறுவாய்த்து ஒழிந்தோர் உள்ளியும், தோல்
[துமிபு
வைந்நுனைப் பகழி மூழ்கலின் செவிசாய்த்து
உண்ணாது உயங்கும் மாசிந் தித்தும்,

ஒருகை பள்ளி ஒற்றி ஒருகை
முடியொடு கடகம் சேர்த்தி நெடிதுநினைந்து
பகைவர்ச் சுட்டிய படைகொள் நோன்விரல்
நகைதாழ் கண்ணி நல்வலம் திருத்தி
அரசுஇருந்து பணிக்கும் முரசுமுழங்கு பாசறை
இன்துயில் வதியுநன் காணாள் துயர்உழந்து
நெஞ்சுஆற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு
நீடுநினைந்து தேற்றியும் ஒடுவளை திருத்தியும்
மையல் கொண்டும் ஒய்யென உயிர்த்தும்
ஏஉறு மஞ்ஞையின் நடுங்கி இழைநெகிழ்ந்து
பாவை விளக்கின் பரூஉச்சுடர் அழல
இடம்சிறந்து உயரிய எழுநிலை மாடத்து
முடங்குஇறைச் சொரிதரு மாத்திரள் அருவி
இன்பல் இமிழ்இசை ஓர்ப்பனள் கிடந்தோள்
அஞ்செவி நிறைய ஆலின; வென்றுபிறர்
வேண்டுபுலம் கவர்ந்த ஈண்டுபெருந் தானையொடு
விசயம் வெல்கொடி உயரி வலனேர்பு
வயிரும் வளையும் ஆர்ப்ப, அயிர
செறிஇலைக் காயா அஞ்சனம் மலர,
முறிஇணர்க் கொன்றை நன்பொன் காலக்,

கோடல் குவிமுகை அங்கை அவிழத்,
தோடார் தோன்றி குருதி பூப்பக்,
கானம் நந்திய செந்நிலப் பெருவழி
வானம் வாய்த்த வாங்குகதிர் வரகின்
திரிமருப்பு இரலையொடு மடமான் உகள,
எதிர்செல் வெள்மழை பொழியும் திங்களின்
முதிர்காய் வள்ளியங் காடுபிறக் கொழியத்,
துணைபரி துரக்கும் செலவினர்
வினைவிளங்கு நெடுந்தேர் பூண்ட மாவே.

---

# முல்லைப் பாட்டின் உள்ளுறை

கார்காலத் துவக்கத்தில் ஒரு நாள் மாலைநேரம்; அக் காலத்தில் வந்துவிடுகிறேன் என்று சொல்லிப் பகை நாட்டின்மேற் பிரிந்து சென்ற காதலன் இன்னும் வரவில்லை. மேகம், அலையொலி முழங்குகின்ற குளிர்ந்த கடல் நீரைக் குடித்து அங்கிருந்து வலமாக எழுந்து மலைகளை இருப்பிடமாகக் கொண்டு பின்பு இந்த அகலமான இடத்தையுடைய உலகத்தை வளைத்து உயர எழுந்து மழைநீரைப் பொழிந்தபடியாய் வானத்தில் விரைந்து செல்கின்றது. மேகம் இங்ஙனஞ் செல்கின்ற நிலை, ஒரு காலத்தில், மாவலி வார்த்த நீர், சக்கரமும் சங்கும் வைத்த, திருமகளைத் தாங்கிய தன் பெரிய கைகளில் ஒழுக இந்த உலகத்தையே வளைத்துக்கொண்டு நிமிர்ந்த திருமாலின் தோற்றம்போலிருக்கின்றது. இங்ஙனஞ் சென்ற மேகம் தனது முதல் மழையைப் பெரிய மழையாகப் பொழிகின்றது. மாலைக் காலம் இருப்பது என்னவோ சிறிது நேரந்தான். ஆனல், அது, காதலனைப் பிரிந்திருக்குந் தலைவிக்கு எவ்வளவு வருத்தந் தருகின்றது.

(இத்தகைய சிறிய புல்லிய கார் காலத்து மாலைப் பொழுதை ஆசிரியர் நப்பூதனார்,

'நனந்தலை யுலகம்..............சிறுபுன் மாலை'

—(1 - 6)

என்னும் பகுதியில் தெளிவாக விளக்கியிருக்கின்றார்.)

தலைவி இங்ஙனம் வருந்துதலால், அவளருகிலிருக்கும் பெரிய முதிர்ந்த பெண்டிர்க்கும் நெஞ்சம் குழைகின்றது. அவர்கள் அவளை நோக்கி,

'நங்காய், நீ நின் காதலனை நினைந்து வருந்தும் வருத்தத்தால் நின் உடம்பு முழுமையும் பசலை நிறம் உண்டாயிருக்கின்றது; (இது 'மாயோய்' என்பதன் பொருள், 21-ம் வரி); இங்ஙனம் வருந்துகின்ற நினது வருத்தத்தை விட்டுவிடு; ('பருவரல் எவ்வம் களை' என்பதன் பொருள், 21-ம் வரி); நாங்கள் இந்த அரிய காவலையுடைய பழமையான நகரத்தின் பக்கத்திற் போய், நாழியில் எடுத்துக் கொண்டுபோன நெல்லும், அரும்பு அவிழும் மலர்களாயிருந்த நல்ல முல்லை மலரும், யாழின் ஒலிபோல் ஒலிக்கின்ற ஓர் இனமான வண்டுகள் அந்த முல்லை மலரின் தேனை விரும்பி அப்போது ஆரவாரிக்கும்படி அங்கே ஓரிடத்

தில் தூவித், தெய்வம் வணங்கி நற் சொல் ஏதேனும் நிகழ்கின்றதா என உற்றுக்கேட்டு நின்றோம். அங்கே அருகிலிருந்த ஒரு மாட்டுக்கொட்டிலிற், சிறிய கயிற் றாற் கட்டப்பட்டிருந்த இளங்கன்றுகள் மிக்க துயரத் தாற் சுழன்று சுழன்று வருந்துதலைப் பார்த்து, ஓர் இடைப் பெண், குளிரினால் நடுங்குகின்ற தன் தோள் களைக் கட்டிய கைகளோடு நின்று, 'உங்கள் தாய்மாரா கிய ஆக்கள், கையிற் கொடிய நீண்ட கோலையுடைய இடையர்கள் பின்னால் நின்று செலுத்திவர இப்போதே வருவார்கள்' என்று சொல்லிக்கொண்டிருந்தாள்; நன் மை தருகின்ற இந்த நல்ல மொழியை நாங்கள் அப் போது கேட்டோம். நல்லோர் வாய்ச்சொல் எப்போ தும் நல்லனவாம்; ஆதலால், பகைவர் நிலத்தைக் கவர்ந்து, அவர் தருந் திறைகளுங் கொண்டு, தாம் எடுத்த போர்வினையை முடித்து நின் தலைவர் உடனே திரும்பிவருவது உண்மை'

என்று எடுத்துக்காட்டித் தேற்றுகின்றார்கள்.

இப்படி அவர்கள் பலதரம் எடுத்துக்காட்டித் தேற்றியும் அதைக் கருதாதவளாய்த் தலைவி கலக்கம் மிகுந்து தன் மலர்போலுங் கவர்ச்சியான கண்களில்

முத்துப்போன்ற தனித்தனியான கண்ணீர்த் துளிகளைத் துளித்து வருந்துகின்றாள்.

(பெருமுது பெண்டிர் ஆற்றுதலும், தலைவி அதனால் ஆறுதல் கொள்ளாமல் வருந்துதலுமான இந்த இரக்கமான நிலைமையை ஆசிரியர்,

'அருங்கடி மூதூர்.........புலம்புமுத் துறைப்ப'
— (7 - 23)

என்னும் அடிகளில் தெளிவாக எடுத்துக் காட்டியிருக்கின்றார்.)

தலைவியின் நிலைமை இங்ஙனமிருக்கப், பகையரசரோடு போர் புரிவதற்காகப் படை திரட்டிச் சென்ற அவள் தலைவன், அவ்வரசரது நாட்டுக்குப் பாதுகாவலாயுள்ள அகலமான நீண்ட காட்டில், ஒரு பாசறை அமைத்து, அதன்கண் தானுந் தன் படைகளுந் தங்கி நாடோறும் போர் புரிந்து வருகின்றான். இடையே ஒருநாள் அவன், தன் படைகள் போரில் மிகவும் புண்பட்டமை நினைந்து, நாளைக்கு இப் படைகள் எங்ஙனம் போர் செய்யுமோ என்னுங் கவலையோடு நீள நினைந்தவனாய்த் தன் படுக்கையில் உறக்கங்கொள்ளாமலிருந்தான். ஆனால், தலைவி மேற்காட்டியவாறெல்லாம்

வருந்திக்கொண்டிருந்த நாளுக்கு முதல்நாள், தலைவன் தானே படையெடுத்துப் போர்செய்து பகைவரை முறியடித்து வெற்றிமாலை சூடினான். அதன்பின், மறுநாள் மாலை தலைவியைக் காணலாம் என்னும் எண்ணத்துடன் மிக்க மகிழ்ச்சியோடு, தனது பாசறையில் வெற்றி முரசம் முழங்க, அன்றிரவில் இனிதாக உறக்கங் கொள்கின்றான்.

(தலைவனது பாசறை யமைப்பும், அதன்கண் அவன் இருக்கும் இவ் விருப்புமெல்லாம் இந் நூலில் 24-ம் அடி முதல் 80-ம் அடிவரையில் மிக விரிவாகத் திரைவிளக்கம்போல எடுத்துக்காட்டப்படுகின்றன. இப் பகுதியின் முழு விளக்கமும், இந் நூலின் பொருட்குறிப்பகாரதியில் வரும் 'பாசறை', 'தலைமகன்' என்னுந் தலைப்புகளில் விளக்கமாகக் காட்டப்பட்டிருக்கின்றன.)

இங்ஙனம் தலைவன் பாசறையின்கண் மகிழ்ச்சியினால் இனிய துயில்கொண்டிருக்கத், தலைவி அவனைத் தனக்கு அருகிற் காணாதவளாய் மிக்க துன்பத்தில் வருந்துகின்றாள்.

(இந் நிலைமை,

—'பாசறை
இன் துயில் வதியுநன் காணுள் துயருழந்து'
— (79—80)

என்னும் அடிகளாற் குறிக்கப்படுகின்றது.)

தலைவன் மறுநாள் விடியற்காலையிற் புறப்பட்டு விட்டான்; தலைவி மிகுதியும் வருந்துகின்ற நாள் அது. தலைவன் தன் மாற்றாரை வென்று, அவர் விரும்பியிருந்த நிலங்களைக் கைப்பற்றிக்கொண்ட மகிழ்ச்சியினுல் வர வர விரைவாய்த் திரளுகின்ற தனது பெரிய படையோடு, திரும்பி வருகின்றான். அப்போது வெற்றியைக் குறிக்கும் வெற்றிக்கொடி உயர்த்தப்படுகின்றது. அவ் வெற்றிக்கு ஒப்ப ஊதுகொம்பும் சங்கும் முழங்குகின்றன. கார்காலத் துவக்கமாதலால், அவன் வரும் வழியில் முல்லைக் காட்டு நுண் மணலிடங்களில் நெருங்கிய இலைகளையுடைய காசாஞ் செடிகள் மை நிறம் போல நீல மலர்களைப் பூத்திருக்கின்றன. தளிரும் பூங்கொத்துகளும் உடைய கொன்றை மரங்கள் நல்ல பொன் மலர்களைச் சொரிகின்றன; காந்தளின் குவிந்த அரும்புகள் உள்ளங்கைகள் போல

விரிந்திருக்கின்றன; இரட்சி பொருந்திய தோன்றிப் பூக்கள் இரத்தம்போற் சிவப்பாய் மலர்ந்திருக்கின்றன. காடு செழித்திருக்கின்றது. மழை பெய்த நாளாதலின் செம்மண்ணின் நிறம் பின்னுஞ் சிவப்பேறி வழி நில மெல்லாம் செந்நிறமாயிருக்கின்றது. தலைவன் தேர் ஊர்ந்து வருதலின், அவன் வருகின்ற வழி அகலமான தாயிருக்கின்றது.

வேனிற் காலத்தில் இடையிடையே காலந் தவ றாமல் மழை பெய்யப் பெற்ற வரகங்கொல்லைகள் இப் போது விளைந்த கதிருள்ளனவாயிருக்கின்றன. முறுக் குண்ட கொம்புகளையுடைய இரலை என்னும் ஒரு வகைக் கலைமான்களோடு இளைய பெண்மான்கள் மகிழ்ச்சியாய்க் கூடித் துள்ளுகின்றன. இப்போது தான் கார் காலந் துவங்குதலின், இனிமேற் பெய்வதற் காக வெண்மையான மேகங்கள் வானத்திற் பரந்து செல்கின்றன. இவை நீர்பொழியக் கூடிய திங்கள் ஆவணி புரட்டாசி என்னும் கார்காலத் திங்கள்களே யாம். இத் திங்கள்களில் வள்ளிக்காய்கள் முற்றுவது வழக்கம். தலைவன் வரும்போது, அங்ஙனம் முற்றிக் கிடக்குங் காய்களையுடைய வள்ளிக் காடுகள் வர வரப்

பின்றேற் கழிந்தன. இப்போது, தலைவி இருக்கும் இடத்துக்கு அணுக்கமாகத் தலைவன் வந்துகொண்டிருக்கின்றான்.

தலைவன் ஊர்ந்து வருகின்ற பெரிய தேர் விரைந்தோடுஞ் செயலிற் சிறந்து விளங்குவது. அதன்கண் பூட்டப்பட்ட குதிரைகளும் இயல்பாகவே விரைந்தோடக் கூடியவை. ஆயினுந் தலைவியைக் காணும் விருப்பத்தினல் அக் குதிரைகளை மேன்மேலும் விசையாய்ச் செலுத்தி வருகின்றவர்களாய்த், தலைவனும் பாகன் முதலியோரும் மிகு விரைவாய் வருகின்றனர்.

( பாசறையிலிருந்து தலைவன் வெற்றியுடன் விரைந்து வருகின்ற இவ் வருகைச் சிறப்பினை ஆசிரியர், நாம் நங் கண்ணெதிரில் நேரிற் காண்பது போலவே,

......'வென்று பிறர்

...... பூண்ட மாவே'

—(89 - 103)

என்னும் அடிகளில் மிகத் தெளிவாக விளக்குகின்றார்.)

இனித் தலைவியோ, இன்னமுந் தன் தலைவனிடத்தே நெஞ்சத்தைப் போக்கி வருந்துகின்றனள். அவளுக்

குள்ள நிறை என்னும் பண்பையும் அவள் தனிமை கெடுக்கின்றது.

பின்பு, அவள், தன்னை ஒருவாறு தேற்றிக்கொள்ளவும் முயல்கின்றாள். ஏனென்றால், வாழ்க்கையிற் சில நேரங்களில் தலைவன் வெளியிற் பிரிந்துசெல்ல வேண்டுவது முதன்மையே எனவும், அவன் திரும்பி வருமளவும் அவன் சொற்படியே தான் ஆற்றியிருக்கவேண்டுவதுங் கட்டாயமே எனவும் அவள் ஒரோவொருகால் நெடுக நினைந்து பார்ப்பதே அதற்குக் காரணம். உடல் மெலிந்தமையாற் கழன்றோடுகின்ற வளைகளையும் முன்போலவே கைகளிற் செறித்துத் திருத்திக் கொள்கின்றாள்.

ஆயினும், தலைவனைப் பிரிந்திருக்க மாட்டாமையால் அவள் மீண்டும் மயக்கங்கொண்டு விரையப்பெருமூச்சு விட்டு அம்பு தைத்த மயில்போல் நடுங்குகின்றனள். இந் நடுக்கத்தால் மீண்டும் உடல் மெலிந்து இழை நெகிழ்கின்றது.

தலைவி இருக்கும் இல்லம் எழுடுக்கு மாளிகை; அது கட்டப்பட்டிருக்கும் இடம் இயற்கையான முல்லைக் காடு; ஆதலின் அந்த இடம் நலஞ் சிறந்து உயர்ந்

திருக்கின்றது. மாளிகை பொன்னாலும் மணியாலும் இழைக்கப்பெற்று உயர்ந்த முறையிற் பல வசதிகளோடு அமைக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் அக் கட்டிடமும் நலஞ்சிறந்து உயர்ந்திருக்கின்றதென்று கொள்ளவேண்டும். அத்தகைய இல்லத்திலேதான் தலைவி வருந்திக் கிடக்கின்றனள்.

அந்தி மாலையும் வந்தது; பெரிய வெண்கலப் பாவையின் கையில் அமைக்கப்பட்ட விளக்கிற் பருமையான சுடர் எரிந்துகொண்டிருக்கின்றது. அப்போது தான் தலைப்பெயல் மழை பொழிந்து பின் தூறலாய்த் துவரித்துக்கொண்டிருக்கின்றது. அம் மழையினால், அம் மாளிகையின் கூடல்வாயிற், பெரிய திரண்ட மழையருவிகள் விழுகின்ற ஒலிகள், பல வகையான ஒலிக் குறிப்புகளுடன் ஒலித்துக்கொண்டிருக்கின்றன. இவ் வொலிகள் தன் காதில் விழத், தலைவி உளம் நொந்தபடியாய்ப் படுக்கையிற் கிடக்கின்றனள்.

இங்ஙனங் கிடக்கின்றவளுடைய காதுகள் நிறையும்படி, அம் மாளிகையை அணுகிய தலைமகனது தேரிற் பூட்டிய குதிரைகள் திடுமெனக் கனைத்தொலித்து ஆரவாரித்தன.

(பின், தலைவியின் மகிழ்ச்சிக்கும் ஓர் அளவுண்டோ?

இவர்கட்கு நேர்ந்த இச் சந்திப்பின் அருமையான நிலைமையை ஆசிரியர்,

'நெஞ்சாற்றுப் படுத்த......

அஞ்செவி நிறைய ஆலின......

......நெடுந்தேர் பூண்ட மாவே'

— (81 - 89 ; 103)

என்னும் பகுதியில் உருக்கமும் வியப்புந் தோன்ற இனிது விளக்கி முடித்திருக்கின்றார்.

புறப்பொருள்களின் நிகழ்ச்சிகள் அகவுணர்வுகளின் சுவைமைக்கு இடமாயிருக்குமியல்பைத் தெளிய விளக்குஞ் சிறப்பே இலக்கியச் சிறப்புகளில் முதன்மையானது. முல்லை நிலத்தின் இயல்புகளையும், மழைகாலத்தின் தன்மைகளையும், தலைவனது பாசறை நிகழ்ச்சிகளையும் நன்கு விளக்கி, அவற்றால் தலைவன் தலைவியரின் உணர்வு நிலைகள் எவ்வெவ்வாறு உருப்பெறுகின்றன என்பதை இவ்வாசிரியர் திறமாகத் தெருட்டியிருக்கும் நுட்பம் அறிஞர்கட்கு நல்ல இன்பம் பயப்பதாயிருக்கின்றது.

மக்கள் எந்தெந்த உணர்வுநிலைகளிற் சிறப்படைய வேண்டுமோ, அவ்வவற்றை உருவாக்கத் தகுந்த இயற்கை நிலைகளிலும் செயற்கை முறைகளிலும் ஊன்றிப் படிதலால், அவர்கள் அந் நலங்களைப் பெறலாம். இதற்குத் தேவையான உள்ளத் தெளிவைப் பழைய செந்தமிழிலக்கியங்கள் வளமாக நல்குகின்றன).

---

# முல்லைப் பாட்டுச்

# சொற்குறிப்பு அகராதி

எண் - அடியெண்



---

குறிப்பு ;— ந.- நச்சினார்க்கினியர் உரை: ம.- மறைமலையடிகள் உரை; இவ்வெழுத்துகள் குறிக்கப்படாத இடங்களில், எல்லாம் நச்சினார்க்கினியருரையாகவே கொள்ளற்பாலன.

மான வெற்றி முரசு முழங்கும் பாசறை, ம., 79

அரசு - பகையரசு, 79.

அரணம் - அரணே, ந., அரணமே, ம., 42; அரண், ந., காவலிடம், ம., 42

அரு - அரிய, 7

அருங்கடி மூதூர் -(பகைவர் அணுகுதற்கு) அரிய காவலையுடைய பழைய ஊர், 7

அருப்பம் - அரண்களை, ந., கோட்டைகளை, ம., 26

அருப்பம் மாட்டி- அரண்களையழித்து, 26

அரும்பவிழ் அலரி- அரும்புகளவிழ்ந்த பூ, 10

அரும்பு- அரும்புகள், 10

அருவி - அருவிகளினுடைய, 87

அலமரல் - சுழலுகின்ற தன்மையை, ந., சுழலுதலை, ம., 13

அலரி - பூ, 10

அலரி தூஉய் - பூவைத் தூவி, 10

அவிழ் - அவிழ்ந்த, 10

அவிழ் அலரி - அவிழ்ந்த பூ, 10

அவிழ - விரிய, 95

அழல - நின்று எரிய, 85

அளந்து - இத்துணை யென்று அளந்து, ந., இத்துணையென்று வரம் பறுத்து, ம., 55

அறியும்-உணரும், ம., 55

அறை, 64

அன்ன - ஒத்த, 70

ஆக, 42, 66

ஆங்கு - போல, 52

ஆடு - அசைகின்ற, 51

ஆடுகொடிப் படாஅர் அசைகின்ற கொடியினை யுடைய சிறு தூறுகள், 51.

ஆய் - இடைச் சாதியின், 13

ஆய்மகள் - இடைச் சாதியின் மகள், ந., இடைப் பெண், ம., 13

ஆர் - நிறைந்த, 96

ஆர்ப்ப - ஆரவாரிக்கும்படி, 8; முழங்க, ந., ஒலிப்ப, ம., 92

ஆலின - ஆரவாரித்தன, 89

ஆற்றுப்படுத்த - வழியிற் செலுத்துதலால், 81

ஆறு - வழியில், 81

இசை - ஓசையினையுடைய, 8; ஓசைக் கண்ணே, 88

இசைப்ப - சொல்லுகையினாலே, ந., சொல்ல, ம., 58

இடஞ் சிறந்துயரிய எழுநிலை மாடத்து - தனக்குள்ள இடமெல்லாம் பொன்னாலும் மணியாலும் சிறப்புப்பெற்று உயர்ந்த எழுநிலையினையுடைய மாடத்திடத்து, 86

இடம் - இடமெல்லாம், 86

இடு - இடும், 27

இடுமுட் புரிசை - முள்ளாலிடும் மதில், 27

இடை - இடத்தே, 34

இணர் - கொத்தினையும், 94

இமிழ் - முழங்குகின்ற, 4, 88

இமிழிசை - முழங்குகின்ற ஓசை, 83

இரலையொடு மடமான் உகள - புல்வாய்க் கலையோடே மடப்பத்தையுடைய மான் துள்ள, 99; மழையால் தண்ணீரும் புல்லும் நிறையப்பெற்றுப் புணர்ந்து திரியுமென்ற

இனம் - இனமான, 8

இனைத்து - இத்துணை, ந., இவ்வளவு, ம., 58

இனைத்தென்றிசைப்ப - இத்துணையென்று சொல்லுகையினாலே, ந., இவ்வளவென்று சொல்ல, ம., 58

ஈண்டு - திரளுகின்ற, 90

ஈண்டுபெருந் தானையொடு - திரளுகின்ற பெரிய படையோடே, 90; அரசன் வினை முடித்த காலத்து விரைந்து போந்தானாகலின், அது கேட்டு வருகின்ற படையென்பது தோன்ற 'ஈண்டு பெருந்தானை'யென்றார்.

ஈர், 64 ( இரண்டு )

ஈர் அறை - புறவறைக்கு உள்ளறையில், ந., இரண்டறை, ம., 64

ஈரறைப் பள்ளியுள் - புறவறைக்குள்ளறையிற் படுக்கைக்கண்ணே, ந., முன்னொன்றும் உள்ளொன்றுமாக இரண்டறை வகுத்த பள்ளியறையினுட் புறவறையின்கண்ணே, ம., 64

உகள - துள்ள, ந., தாவியோட, ம., 99

உடம்பின் - கையாலும் முகத்தாலும், ந., உடம்பால், ம., 65

உடம்பின் உரைக்கும் உரையா நாவிற் படம்புகு மிலேச்சர் - வார்த்தை சொல்லாத நாவினையுடைய கையாலும் முகத்தாலும் வார்த்தைசொல்லும் சட்டையிடும் சரவாசிகள், 65-6

உடம்பின் உரைக்கும்... மிலேச்சர் - கையாலும் முகத்தாலும் வார்த்தை சொல்லும்...... சாவாசிகள், 65-6; (ஊமைகளா

தலின். உடம்பாற் குறி காட்டித் தெரிவித்த லென்க.

உடுத்த, 37

உடை - புடைவை உடையினையும், 59

உண் - மையுண், 23

உண்கண் - மையுண் கண்கள், 23

உண்ணாது - தின்னாமல், 33; புல்லுண்ணாதே, ந., தீனியெடாமல், ம., 74

உமிழ் - காலுகின்ற, 48

உய்த்தர - செலுத்துதலைச் செய்கையினாலே, ந., செலுத்த, ம., 15

உயங்கும் - வருந்தும், 74

உயரி - எடுத்து, 91

உயரிய - உயர்ந்த, 86

உயரிய எழுநிலை மாடத்து - உயர்ந்த எழு நிலையினையுடைய மாடத்திடத்து, 86

உயிர்த்தும் - நெட்டுயிர்ப்புக்கொண்டும், ந., பெருமூச்செறிந்தும், ம., 83

உரைக்கும் - வார்த்தை சொல்லும், 65

உரையா - வார்த்தை சொல்லாத, 65

உரையா நா - வார்த்தை சொல்லாத நா, 65; ஊமைகளென்றற்கு.

உலகம் - உலகத்தை, 1.

உலகம் வளை இ - உலகத்தை வளைத்து, 1.

உலகம் வளை இ...... நீர் செல நிமிர்ந்த மாஅல் - உலகத்தைத் திருவடிகளிலே அணைத்துக் கொண்டு நீர் செல நிமிர்ந்த மால் என்று முரைப்பர், 1 - 3.

உவலை - தழையபாலே, 29

உவலைக்கூரை - தழையாலே வேய்ந்த கூரை, 29

உழந்து - உற்று, 80

உழையர் - (அருகி

எவ்வம்-வருத்தத்தை, 21
எழிலி - மேகம், 5
எழினி - திரையை, 64
எழினி வாங்கிய - திரையை வளைத்த, 64
எழினி வாங்கிய.......பள்ளி- திரையை வளைத்த பள்ளியறை, 64
எழு - எழு, 86
எழுந்த, 5
எழுநிலை- ஏழு நிலையினையுடைய, ந., ஏழடுக்கு, ம., 86
எழுநிலை மாடத்து - ஏழு நிலையினையுடைய மாடத்திடத்து, 86
எறி - எறிகின்ற, ந., வீசுகின்ற, ம., 57; வெட்டுகின்ற, ந., 68
எறி நீர் - திரையெறிகின்ற கடல், ந., வீசுகின்ற கடல் நீர், ம., 57
எறிநீர் வையகம் - திரையெறிகின்ற கடல் சூழ்ந்த உலகம், 57
என்போள் - என்று கூறுகின்றோளுடைய, 16
என்று, 58
என-, 83;என்று கூற, 21
ஏ-, 103; அம்பு, ம., 84
ஏம் - காவல், 27
ஏமஞ் சூழ - காவலாகச் சூழ்ந்து திரிய; ந., 54
ஏமம் - காவலாக, 54
ஏமுற வளைஇ - காவலுறும்படி வளைத்து, 27
ஏர்பு - எழுந்து, 4; தோன்றி, 91
ஏவு - அம்பு, 84
ஏவுறு மஞ்ஞை - அம்பு தைத்த மயில்; இது, மயிலின் சாயலினையுடைய தலைமகள் நடுக்கத்திற்கு உவமையாயிற்று, ம., 84
ஏவுறு மஞ்ஞையி னடுங்கி -அம்பு தைத்த மயில் போல நடுங்கி, 84

ஒற்றி - வைத்து, 75
ஓங்கு - வளர்கின்ற, ந., 32; பெரிய, ந., உயர்ந்த, ம., 53
ஓங்கு நடை - பெரிய வொழுக்கம், ந., உயர்ந்த நல்லொழுக்கம், ம., 53
ஓங்கு நிலைக் கரும்பு - வளர்கின்ற தன்மையையுடைய கரும்பு, 32
ஓடா - ஓடாமைக்குக் காரணமான, 39
ஓடா வல் வில் - ஓடாமைக்குக் காரணமான வலிய வில், 39
ஓடு - கழலுகின்ற, ந., 82
ஓடு வளை திருத்தியும் - கழலுகின்ற வளையைக் கழலாமற் செறித்தும், 82.
ஓர், 43.
ஓர்ப்பனள் - கருதி, 88
கச்சின் - கச்சினாலே, 47
கடகம் - கடகத்தை, ந., கங்கணம், தொடி, வளை, ம., 76
கடல் - கடலை, 4.
கடல் பருகி வலனேர்பு கோடுகொண்டெழுந்த கொடுஞ்செலவெழிலி - கடலைக் குடித்து வலமாகவெழுந்து மலைகளை இருப்பிடமாகக் கொண்டு......எழுந்த கடிய செலவினையுடைய மேகம், 4 - 5
கடி - காவலையுடைய, 7
கடுப்ப - ஒக்க, 38
கண் -, 67; கண்கள், 23; கண்ணையுடைய, 31.
கண்டம் - பல நிறத்தாற் கூறுபட்ட மதிட்டிரையை; ஆகுபெயர், ந., கூறு, கூறுபட்ட பல நிறத்தினையுடைய திரையையுணர்த்தியது ஆகுபெயர்: பல நிறம் வாய்ந்த மதிட்

அழுகை, ம., 22
கவர்ந்த - கைக்கொண்ட, 90
கவர்ந்து - கொண்டு, 19
கவலை - நாற்சந்தியான, ந., நாற்சந்தி கூடுமிடம், ம., 30
கவலை முற்றம் - நாற்சந்தியான முற்றம், 30
கவலை முற்றம் காவல் நின்ற......யானை - நாற்சந்தியான முற்றத்தே காவலாக நின்ற ...... யானை, 30
கவளங் கைப்ப - (பரிக்கோலாலே) கவளத்தைத் தின்னும்படி குத்த, ந., கவளம் ஊட்ட, ம., 36
கவளம் - கவளத்தை, 36
கவுள - கதுப்பினையுடையவாகிய, ந., கன்னத்தினையுடைய, ம., 31
கவை - கவைத்த, ந., கவர்த்த அல்லது பிளப்பான, ம., 35
கவை முட் கருவி - கவைத்த முள்ளையுடைய பரிக்கோல், ந., கவர்த்த அல்லது பிளப்பான முள்ளுள்ள பரிக்கோல், ம., 35
களை - போக்கு, 21
கற்றோய்த்து உடுத்த படிவப் பார்ப்பான் - துகிலைக் காவிக் கல்லிலே தோய்த்துடுத்த விரதங் களையுடைய முக்கோலந்தணன், 37.
கன்றின் - கன்றினுடைய, 12
கன்றின் உறு துயர் அலமரல் - கன்றினுடைய முலையுண்ணமலுறுகின்ற துயராலே தாய் வருமென்று சுழலுகின்ற தன்மை, 12 - 3
கன்னல் - நாழிகை வட்

கானம் நந்திய செந்நிலப் பெருவழி-காடு தழைத்த சிவந்த நிலத்திற் பெருவழி, ந., காடு செழித்த செவ்விய முல்லை நிலத்தின் வழி, ம., 97

கானம் நந்திய செந்நிலம்-காடு தழைத்த சிவந்த நிலம், ந., காடு செழித்த செவ்விய முல்லை நிலம், ம., 97

கிடந்தோள் - கிடந்தோளுடைய, 88

கிடுகு - கிடுகுகளையும், ந., படல்களை, ம., 41

கிடுகு நிரைத்து - கிடுகுகளையும் நிரையாகக் குத்தி, ந., படல்களை வரிசையாகப் பிணைத்து, ம., 41

குத்தி - நட்டு, ந., ஊன்றி, ம., 40; ஊன்றி, ந., நட்டு, ம., 41

குந்தம் - எறி கோல்களையும் ந., குந்தக் கோல்களை, ம., 41

குந்தம் குத்திக் கிடுகு நிரைத்து - எறி கோல்களையும் ஊன்றிக் கிடுகுகளையும் நிரையாகக் குத்தி, ந., குந்தக்கோல்களை நட்டு அவற்றின் பாற் படல்களை வரிசையாகப் பிணைத்து, ம., 41

குருதி - உதிரம்போல, ந., சிவப்பாக, ம., 96

குருதி பூப்ப - உதிரம் போலப் பூப்ப, 96

குவி-குவிந்த, 95

குவி முகை - குவிந்த முகைகள், 95

குளகு - அதிமதுரத் தழையையும், ந., தழையினை, ம., 33

குறு, 58; குறிய, 45

குறுந்தொடி - குறிய தொடி, 45

வி சாய்த்துப் புல்லுண்ணுதே வருந்துங் குதிரைகள், 73-4.

செவி நிறைய ஆலின - செவி நிரம்பும்படி ஆரவாரித்தன, 89

செறி - நெருங்கின, 93

செறி யிலை - நெருங்கின இலை, 93

செறி யிலைக் காயா - நெருங்கின இலையினையுடைய காயா, 93; (காயா-காசாஞ் செடிகள்)

செறிவு-செறிதலையுடைய, ந., நெருங்குதலுற, ம, 59

சேண் - தூரிய நிலத்தே, ந., நீள, ம., 25

சேண் நாறு பிடவம் - தூரிய நிலத்தே நாறுகின்ற பிடவம், ந., நீள மணங் கமழும் பிடவம், ம., 25.

சேர்த்தி - சேர

வைத்து, 76

சொரி - சொரிதலை, 87

சொரிதரும் - சொரிதலைச் செய்யும், ந., 87

சோறு - செஞ்சோற்றுக் கடன், 72

சோறு வாய்த்து - செஞ்சோற்றுக் கடனிறுத்து, 72

சோறு வாய்த்து ஒழிந்தோர் - செஞ்சோற்றுக் கடனிறுத்துப் பட்ட வீரர், 72

ஞாண் - கயிற்றின், 63

ஞாண் எழினி - கயிற்றின் திரை, 63-4

தட - பெரிய, 2

தடக்கை - பெரிய கைகள், 2

தபு - கெடுத்த, ந., கெடுதற்கு ஏதுவான, ம., 81

தம்-, 34

தரும் - செய்யும், 87

திரு - அழகினையுடைய, 63.

திருத்தி - உண்டாக்கி, ந., செவ்விதாக்கி, ம., நிலைபெறுத்தி, ந., 78

திருத்தியும் - கழலாமற் செறித்தும், 82

திருமணி - அழகினையுடைய மாணிக்கம், ந., அழகிய பளிங்கு, ம., 63

திறையர் - திறையினையுமுடையராய், 19

துகில் - மயிர்க்கட்டு (தலைப்பாகை போன்றது), ந., கூறையால், ம., 53

துகின் முடித்துப் போர்த்த ......பெருமூதாளர் - மயிர்க்கட்டுக் கட்டிச் சட்டையிட்ட...... மெய்காப்பாளர், 53

துடைத்து, 33

துமிபு - அறுத்து, 72

துமிய - அற்றுவிழும்படி, 70

துயர் - துயராலே, 13; வருத்தம், 80

துயருழந்து - வருத்தமுற்று, 80

துயில் - துயில் கொள்ளுதலை, ந., உறக்கத்திலே, ம., 80

துரக்கும் - கடிதாகச் செலுத்தும், ந., மேலுந் தூண்டிச் செலுத்தும், ம., 102

துனை - விரைந்து செல்லும், 102

துனைபரி - விரைந்து செல்லும் பரி, ந., விரைந்து செல்லுங் குதிரை, ம., 102

துனைபரி துரக்குஞ் செலவினர் - விரைந்து செல்லும் பரியை அதனை அமையாமற் கடிதாகச் செலுத்தும் செலவினையுடையராய் வந்தவர், 102

தூஉய் - தூவி, 10
தூங்கல் - அனந்தரினையும் (தூக்க மயக்கத்தினையும்), 53
தூணி - தூணிகளை, ந., அம்பறாப்புட்டிலை, ம., 39
தெருவில் - தெருவிடத்து, 29
தெவ்வர் - பகைவர், 18
தெவ்வர் முனை- பகைவர் மண், ந., பகைவர் இடம், ம., 18 - 9
தேம் - மதம், ந., மதநீர், ம., 31; தேன், ந., 71
தேம் படு கவுள் - மதம் பாய்கின்ற கதுப்பு, ந., மதநீர் ஒழுகுங் கன்னம், ம., 31
தேம்படு கவுள சிறுகண் யானை - மதம் பாய்கின்ற கதுப்பினையுடையவாகிய சிறிய கண்ணையுடைய யானை, 31
தேம் பாய் கண்ணி - தேன் பாக்கும் வஞ்சி மாலை, ந., தேன் ஒழுகும் வஞ்சிமாலை, 71
தேர் - தேரை, ந., தேரில், ம., 103
தேர் பூண்ட மா -தேரைப் பூண்ட குதிரை, ந., தேரிற் கட்டிய குதிரை, ம., 103
தேற்றியும் - துணிந்தும், ந., தேற்றிக்கொண்டும், ம, 82
தோடர் - சங்கிலி, 62
தொடி - தொடியையுடைய, ந., கைவளை, ம., 45
தொடுத்த - கட்டப்பட்ட, 12
தொழுது - வணங்கி, 56
தொழுது காண்கையர் - அரசனைத் தொழுது கொண்டே காணுங் கையினர், ம., 56

தொழுது ...... தோன்ற வாழ்த்தி-அரசனை வணங்கி விளங்க வாழ்த்தி, 56

தோடார் தோன்றி - திரட்சி(தொகுதி) நிறைந்த தோன்றி (மலர்), 96

தோடார் தோன்றி குருதி பூப்ப - திரட்சி நிறைந்த தோன்றி உதிரம் போலப் பூப்ப, ந.,இதழ் நிறைந்த தோன்றிப் பூச் சிவப்பாக அலர; தோடு ஆர் - தொகுதி நிறைந்த என உரைப்பினுமாம், ம., 96.

தோடு - திரட்சி, ந., இதழ், தொகுதி, ம.,96

தோய்த்து - 37.

தோல் - பக்கரைகள், ந., தோற்பரிசை, ம., 72; (குதிரைக் கல்லணை)

தோற்றத்து - தோற்றரவினையும், 60.

தோன்ற - விளக்க, 56

தோன்ற வாழ்த்தி - விளங்க வாழ்த்தி, 56.

தோன்றி, 96

தோன்றி குருதி பூப்ப - தோன்றி உதிரம் போலப் பூப்ப, ந., தோன்றிப் பூச் சிவப்பாக அலர, ம., 96.

நகை - விளக்கம்,ந.,ஒளி, ம., 78

நகை தாழ் கண்ணி - தனக்கு எக்காலமும் விளக்கந் தங்கும் வஞ்சி (மாலை), ந., ஒளி தங்கும் மாலை; என்றது, தனக்குண்டாம் ஒளி தங்குதற்கு அடையாளமாய் இட்ட வஞ்சி மாலையை, ம., 78

நசையொடு - நச்சுதலாலே, ந., விரும்புதலாலே, ம., 67

நடு, 50

நடுங்கி, 84

38; (மேன் மாளிகை), 86

நிழத்திய - எறிந்துவிட்ட, ந., நுணுகிய, ம., 50

நிற்ப - நிற்க, 11

நிறை - 81

நிறைதபு புலம்பு - தனது நிறை கெடுத்த தனிமை, ந., நிறை கெடுதற்கு ஏதுவான தனிமை; 'நிறையெனப்படுவது மறை பிறரறியாமை' என்றார் கலியினும், ம., 81

நிறைய - நிரம்பும்படி, 89

நிறைய ஆலின - நிரம்பும்படி ஆரவாரித்தன, 89

நின் - , 20, நினது, 57

நின்ற - , 30

நின்று - , 15

நினைந்து - சிந்தித்து, ம., 76; நினைத்து, ந., நினைந்துபார்த்து, ம., 82

நீ - , 20

நீடு - நெடுக, ம., 82

நீடு நினைந்து - நெடுக நினைந்து, ம., 82

நீர் - , 3, 57, 58; நீரையுடைய, ம., 28

நீர் செல நிமிர்ந்த மாஅல் - மாவலி வார்த்த நீர் தன் கையிலே சென்றதாக உயர்ந்த திருமால், 3

நீர்ப் புணரி - (ஒலிக்கின்ற) நீரையுடைய கடல், ம., 28

நுதல் - நெற்றியைய, 33

நுனை - முனைகளையுடைய, 34; முனையினையுடைய, 73

நெகிழ்ந்து -, 84

நெஞ்சாற்றுப்படுத்த - அவன் தன் நெஞ்சம் தான் போகின்ற வழியிற் செலுத்துதலால், ந.; அவனிடத்தே தன் நெஞ்சினைப்

போக்கி, ம., 81
நெஞ்சு - நெஞ்சம், 81
நெடிது - நெடிதாக, ந., நீள, ம., 76
நெடிது நினைந்து - இப்படை நொந்த அளவுக்கு நாளை எவ்வாறு பொருமென்று நெடிதாக நினைந்து, 76
நெடு - நெடிய, ந., நீண்ட, ம., 24, 44,50; நெடிய, ந., 48; நெடிதாகிய, ந., 103
நெடுங் காழ்க் கண்டம் - நெடிய குத்துக் கோலுடனே பண்ணின பல நிறத்தாற் கூறுபட்ட மதிட்டிரை, ந., நீண்ட குத்துக்கோல்களோடு சேர்த்துச் செய்த பல நிறம் வாய்ந்த மதிட்டிரை, ம , 44
நெடுந்திரி - நெடிய திரி, 48
நெடுந் தேர் - நெடிதாகிய தேர், 103
நெடுந்தேர் பூண்ட மா - நெடிதாகிய தேரைப் பூண்ட குதிரை, 103
நெடுநா வொண் மணி - நெடிய நாக்கினையுடைய வொள்ளிய மணி, 50
நெடும் புறவு - நெடிய காடு, ந., நீண்ட முல்லைக் காடு, ம., 24
நெய் - நெய்யை, 48
நெய்யுமிழ் சுரையர் - நெய்யைக் காலுகின்ற திரிக்குழாயையுடைய சிற்றாட்கள், 48
நெல்லொடு - நெல்லுடனே, ந., நெல்லும், ம.,8
நேர்பு - உடம்பட்டு, ந., 44
நேமியொடு - சக்கரத்தோடே, 1
நேமியொடு வலம்புரி.... தாங்கு தடக்கை......

மாஅல் -சக்கரத்தோடே வலம்புரியைத் தாங்கும் பெரிய கைகளையுடைய மால், 1 - 3

நேமியொடு வலம்புரி பொறித்த மா தாங்கு தடக்கை நீர் செல நிமிர்ந்த மாஅல் - நேமியோடே வலம்புரியுமாகிய உத்தம இலக்கணங்களைப் பெற்றிருக்கின்ற திருமகளையணைத்த கையிலே நீர் செல்ல(நிமிர்ந்த மால்) என்றுமாம், 1 - 3

நோக்கி - பார்த்து, ந., நோக்கிய, ம., 13

நோன் - வலியினையுடைய, ந., வலிய, ம., 77

நோன் விரல் - வலியினையுடைய கை, ந., வலிய விரல், ம., 77

பகல் - பகற் பொழுது, 46

பகழி - அம்புகள், 73

பகழி மூழ்கலின் - அம்புகள் வந்து அழுந்துகையினாலே, 73

பகைவர் - பகைவரை, 77

பகைவர்ச் சுட்டிய படை - பகைவரைக் கருதி வைத்த வாள், 77

பசலை - வருத்தத்தையுடைத்தாகிய, ந., பசிய, ம., 12

பசலைக் கன்று - வருத்தத்தையுடைத்தாகிய கன்று, ம., 12

படம் - சட்டை, 66

படம் புகு மிலேச்சர் - சட்டையிடுஞ் சரவாசிகள், ந., சட்டையிட்ட ......மிலேச்சர், ம.,66

படாஅர் - சிறு தூறுகள், 51

படிவப் பார்ப்பான் - விரதங்களையுடைய மூக்கோ

பருவரலெவ்வங் களை - மனத் தடுமாற்றத்தான் உளதான வருத்தத்தைப் போக்கு, 21
பருவரலெவ்வம் - மனத் தடுமாற்றத்தான் உளதான வருத்தம், 21
பரூஉ - பரிய, 70, 85
பரூஉக்கை - பரிய கைகள், ந., பரிய தும்பிக்கை ம., 70
பரூஉச் சுடர் - பரிய விளக்கு, 85
பல் - பலவாகிய, ந., பல, ம., 43; பலவாகிய, ந., 88
பள்ளி - படுக்கையின்மேலே, 75
பள்ளியுள் - படுக்கைக் கண்ணே, 64
பனி- குளிர்ச்சியையுடைய, 4
பனிக்கடல் - குளிர்ச்சியையுடைய கடல், 4.,
பனிக்கும் -நடுங்குதற்குக் காரணமான, 79
பாசறை, 79
பாடி - பாசறை, 28
பாடிமிழ் பனிக்கடல் - ஒலி முழங்குகின்ற குளிர்ச்சியையுடைய கடல், ந., 4
பாடு - ஒலி, 4
பாம்பு - பாம்பினது, 70
பாய் - பரக்கும், ந., ஒழுகும், ம., 71
பாய்தலின் - அழுந்துகையினாலே, 68
பார்ப்பான் - முக்கோல் அந்தணன், 37
பாவை - பொற்பாவை, ந., வெண்கலத்தாற் செய்த பிரதிமை; இதன் கையில் விளக்கெரிய விடுவது அரசர்க்கு வழக்கம், ம., 85
பாவை விளக்கிற் பரூஉச் சுடரழல- பொற்பாவை

புலங் கவர்ந்த - நிலங்களைக் கைக்கொண்ட, 90
புலம் - நிலங்களை, 90
புலம்பு - தனித்து வீழ்கின்ற, 23; தனிமை, 81
புலம்பு முத்து - தாரையாகச் சொரிகின்ற தனித்து வீழ்கின்ற முத்துப்போலுந் துளி, 23
புலம்பொடு - தனிமையாலே, 81
புலி, 62
புலித் தொடர் - புலிச் சங்கிலி, 62
புலித்தொடர் விட்ட..... இல் - புலிச் சங்கிலி விடப்பட்ட ... ... இல் (லம்), 62
புழை - சிறுவாயில்களையுடைய, ந., வாயில், ம., 26
புழை யருப்பம் - சிறு வாயில்களையுடைய அரண்கள், ந., வாயிலமைந்த கோட்டை, ம., 26
புள் - நிமித்தச் சொல், ம., 18
புறத்து - முதுகினையுமுடைய, 45
புறவின் - காட்டிடத்தே, ந., முல்லைக் காட்டில், ம., 24
புன் மாலை - (பிரிந்தார்க்கு) வருத்தஞ் செய்கின்ற மாலைக் காலம், 6
புனை - கை செய்த, 62
புனைமாண் நல்இல் - கை செய்த மாட்சிமைப்பட்ட நன்றாகிய இல்(லம்), 62
பூ- (மலர்); குவளைப் பூவின் இதழ், ம., 23; பூத்தொழிலை ந., 41
பூண்ட-கட்டின, ம., 47; கட்டிய, பூட்டிய, ம., 103
பூத்த, 51
பூந்தலைக் குந்தம் - பூத்

தொழிலைத் தலையிலேயுடைய எறிகோல்கள்;

பூந்தலை, விகாரம் (பூத்தலை என வரற்பாலது பூந்தலை என வந்தது), ந., பூச் செதுக்கின தலையையுடைய கைவேல், ம., 41

பூப்ப - அலரவும், ம., 96

பூப்போலுண்கண் - பூப்போலுமையுண் கண்கள், ந., குவளைப் பூவின் இதழையொத்த கண், ம., 23

பெண்டிர் - மகளிர், ம., 11

பெயல் - மழையை, 6

பெரு -, 97; பெரிய, ந., 6, 43, 90; பெரிது, ம., 11

பெருந் தானையொடு - பெரிய படையோடே, 90

பெரும் படை - பெரிய படை, ந., 43

பெரும் பெயல் - பெரிய மழை, 6.

பெரும்பெயல் பொழிந்த சிறு புன் மாலை - பெரிய மழையைப் பெய்த சிறு பொழுதாகிய வருத்தஞ் செய்கின்ற மாலைக்காலம்; முல்லைக் குரிய காரும் மாலையும், 6

பெருமுது பெண்டிர் - பெரிது முதிர்ந்த மகளிர், ம., 11

பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப - பெரிது முதிர்ந்த மகளிர் நற்சொற் கேட்டு நிற்ப, ம., 11

பெருமூதாளர் - மெய்காப்பாளர், ந., பெரிது முதிர்ந்த காவலாளர், ம., 54

பெருமூதாளரேமஞ்சூழ - மெய்காப்பாளர் காவலா

கச் சூழ்ந்து திரிய., 54
பெருவழி - பெருவழியி
லே, 97
பெறுஅது -பெறுமல்,67
பைம் - பசிய, 25
பைம் புதல் - பசிய தூறு
களையும், 25
பொய்யா - பொய்யாத,
55
பொய்யா மாக்கள் -
பொய்யாதலின்றிப் பொ
ழுதறி மாக்கள், ம., 55
பொழிந்த - பெய்த, 6
பொழியும் - பொழிதற்கு
ரிய, ம., 100
பொழுதளந் தறியும் -
வாழ்நாளை இத்துணை
யென் றளந்தறியும், ந.,
பொழுதினை இத்துணை
யென்று வரம்பறுத்து
ணரும், ம., 55
பொழுது - வாழ்நாளை,
ந., பொழுதினை, ம.,55
பொறித்த - வைத்த, 2

பொன் - பொன்னை, 94
போகி - போய், 7
போர் - போரில், 38
போர்த்த -சட்டையிட்ட,
ந., போர்த்துக்கொண்
ட, ம., 53
போல் - போலும், 23
போல, 3
மகள், 13
மங்கையர், 47
மஞ்ஞையின் - மயில்போ
ல, 84
மட - மடப்பத்தையுடை
ய, ந., இள, ம., 99
மடமான் - மடப்பத்தையு
டைய மான், ந., இள
மான்கள், ம., 99
மடமான் உகள - மடப்
பத்தையுடைய மான்
துள்ள, ந., இளமான்
கள் தாவியோட, ம.,99
மண்டமர் - பகைவர் மன
மறியாமல் மிக்குச் செல்
கின்ற போர், 67

மண்டு - மிக்குச் செல் கின்ற, 67
மணி - மணியின் ஓசை, 50; மாணிக்கமாகிய, ந., பளிங்குமணி போறலின் பளிங்கும் மணியெனப் பட்டது, ம., 63
மணி நிழத்திய நடுநாள் - மணியெறிந்து விட்ட நடு யாமம்; கோயில் பணி மடங்கினால் மணி எறிந்துவிடுதல் இயல்பு, ந., மணியினோசையும் அடங்கிய நள்ளிரவு, ம., 50
மணி விளக்கம் - மாணிக் கமாகிய விளக்கு, ந., பளிங்கு விளக்கு, ம., 63
மத்திகை - புரவியை அடிக்கின்ற சம்மட்டி, ந., சவுக்கு; குதிரைச் சம் மட்டி, ம., 59
மத்திகை வளைஇய...... உடை - புரவியை அடிக் கின்ற சம்மட்டி வளைந்து கிடக்கின்ற உடை, ந., குதிரைச் சம்மட்டி சூழப்பட்ட உடை, ம., 59
மருங்கில் - பக்கத்து, 7
மருப்பில் - கொம்பினிடத்தே, 34
மருப்பு - கொம்பினையுடைய, 99
மலர - அவிழ, 93
மழை - மழையை, ம., 100
மழை பொழியும் - மழைசிறு துவலையைப் பொழியும், ந., புயல் மழையைப் பொழியும், ம., 100
மறந்த, 69
மறிந்து - தாழ்ந்து, ந., மடங்கி, ம., 59
மறிந்து வீங்கு செறிவு டை - வடிப்பு தாழ்ந்து பெருக்குஞ் செறிதலையு

டைய புடைவையுடை, ந., மடங்கிப் புடைக்க நெருங்குதலுறக் கட்டின உடை, ம., 59

மா - திருமகளை, 2; குதிரைகளை, 74; பெருமையையுடைய, 87; குதிரை, 103

மாஅல் - திருமாலே, 3; முல்லைக்குரிய தெய்வம்.

மாக்கள் - அறிவில்லாதோருடைய, ந., பொழுதளந்தறியுந் தொழிலன்றிப் பிறிது அறியாமையின் இவரை மக்கள் என்னாது மாக்கள் என்று கூறினர், ம., 55

மாட்ட - கொளுத்த, 49

மாட்டி - அழித்து, 26

மாடத்து - மாடத்திடத்து, 86

மாண் - மாட்சிமைப்பட்ட, 62

மாத் திரளருவி - பெருமையையுடைய திரண்ட அருவிகள், 87

மாயோய் - மாமை நிறத்தையுடையோனே, 21; (மாமை நிறம் - நாருரித்த ஆம்பற் றண்டின் நிறம்போல்வது)

மாலை - மாலைக் காலத்து, 6; முல்லைக்குரியது.

மான், 99

மான் உகள - மான் துள்ள, ந., மான்கள் தாவியோட, ம., 99

மிடைந்தியாத்த - நெருக்கப்பட்டுக் கட்டிப்போகட்ட சாலி, ந., நெருங்கக் கட்டிய, ம., 32

மிடைந்து - இடையே நெருக்கப்பட்டு, ந., நெருங்க, ம., 32

மிலேச்சர் - சாவாசிகள், ந., பெலுச்சிதானத்தின் வழியாகப் புகுந்த ஆரி

யர்; பெலுச்சிதானத்தி னின்று வந்த துருக்கர்; பெலுச்சி......மிலேச்சர் எனத் திரிந்தது, ம.,66
மிலேச்சருழையராக - சர வாசிகள் பள்ளிகொள் ளுமிடத்தைச் சூழ்ந்து திரிய, ந.,ஊமை மிலேச் சர் அருகே காவலிருப் பர், ம., 66
முக்கோல் - முக்கோலி லே, 38
முகை - முகைகள், 95
முட் கருவி - முள்ளையு டைய பரிக்கோல், ந., முள்ளுள்ள பரிக்கோல், ம., 35
முட்புரிசை- முள்ளால்... மதில், 27
முடங்கிறைச் சொரிதரு மாத்திரளருவி - மூட்டு வாய்களினின்றும் சொ ரிதலைச் செய்யும் பெரு மையையுடைய திரண் ட அருவிகள், 87
முடங்கு - மூட்டு, ந., மடங்கிய, ம., 87
முடங்கு இறை - மூட்டு வாய்களினின்றும், ந., மூட்டப்பட்டு வளை வாய் இருக்கும் வீட் டின் இறப்பு; என்றது, நீர் விழுங் கூடல்வாய்; கூரையின் இரு பகுதி கள் ஒன்று பொருந்தும் மூட்டுவாய், ம., 87
முடித்து - , 19; கட்டி, 53
முடியொடு - முடியோ டே, 76
முதிர்- முதிரும், ந., முற் றும், ம., 101
முதிர் காய் வள்ளி - தன் பருவம் வந்தால் முதி ருங் காயை யுடைய வள்ளி(க் கொடி), ந., கார்காலத்து முற்றுங் காயினை யுடைய

றம் - சட்டையிட்ட... தோற்றரவு, 60

மெய்ப்பை புக்க வெருவ ருந் தோற்றத்து வலிபு ணர் யாக்கை வன்கண் யவனர் - சட்டையிட்ட அச்சம் வருந் தோற்ற வினையும் இயல் பான வலி கூடின மெய்யினை யுமுடைய தறுகண்மையி னையுடைய சோனகர், 60 - 61

மெய்ப் பை புக்க வெரு வருந் தோற்றம் - சட்டையிட்ட அச்சம் வருந் தோற்றரவு, ந., 60

மையல் - மயக்கம், 83

மையல் கொண்டும் - மயக்கங் கொண்டும், 83

மையல் கொண்டும் ஓய் வென உயிர்த்தும் - மயக்கங்கொண்டும் விசை ய கெட்டு உயிர்ப்புக் கொண்டும், 83

மொழி - வார்த்தையாக, 17

யவனர் - சோனகர், ந., கிரேக்கர், சோனகர், ம., 61

யாக்கை - மெய், 61 (உடம்பு)

யாத்த - கட்டிப்போகட்ட சாவி, ந., கட்டிய, ம., 32

யாழ் - யாழினது, 8

யாழிசை - யாழினது ஓசை, 8

யாழிசை யினவண்டு - யாழினது ஓசை யினை யுடைய இனமான வண்டு கள், ந., யாழின் நரம் பொலிபோல் ஒலிக்கும் ஓரினமான வண்டுகள், ம., 8

யாறு - ஆறு, 24

யாறு தழீஇய அகனெடும் புறவு - ஆறு சூழ்ந்த அ கன்ற நெடிய காடு, 24

யானை, 31
வடமொழி - யானைப் பேச்சான வடமொழிகளை, 35
வண்டு - வண்டுகள், 8
வதியுநன் - தன்னிடத்தே தங்குகின்றவனை, 80
வயல் - வயலிலே, 33
வயிரும் - கொம்பும், ஊது கொம்பும், ம., 92
வயிரும் வளையும் ஆர்ப்ப - கொம்பும் சங்கும் முழங்க, ந., 92
வரகின் - வரகிடத்தே, 98
வரல் - வருதலையுடைய, 52
வரி - நிறத்தையுடைய, ந., வரிந்து; நிறத்தினை யுடைய என்றுமாம், ம., 47
வரிக் கச்சு - நிறத்தை யுடைய கச்சு, ந., வரிந்து கட்டப்பட்ட இரவிக்கை; நிறத்தினையுடைய கச்சு எனினுமாம், ம., 47
வருகுவர் - வருவர், 16
வருதல் - வருவாரென்று நாம் கருதிய தன்மை, 20
வரும், 60
வல் - வலிய, 39
வல்வில் - வலிய வில், 39
வல்வில் தூணி நாற்றி - வலிய வில்லைச் சேரவூன்றி அதிலே தூணிகளைத் தூக்கி, 39
வலந் திருத்தி - வெற்றியை யுண்டாக்கி, 71; வெற்றியை நிலை பெறுத்தி, 78
வலம் - வெற்றியை, 71, 78
வலம்புரி - வலம்புரியை, 2
வலன் - வலமாக, 4
வலன் - வெற்றி, 91
வலன் ஏர்பு - வெற்றி தோன்றி, ந., வலன்

அச்சம் வருந் தோற்றாவு, ந., காண்பார்க் கச்சம் வருதற் கேதுவான தோற்றம், ம., 60
வெல் - வென்றெடுக்கின்ற, 91
வெல்கொடி - எக்காலமும் வென்றெடுக்கின்ற கொடி, 91
வெல்கொடி யுயரி - எக்காலமும் வென்றெடுக்கின்ற கொடியை எடுத்து, 91
வெலீஇய - வெல்லுதற்கு, 57
வெலீஇய செல்வோய் - வெல்லுதற்குச் செல்கின்றவனே, ந., 57
வெள் - வெள்ளிய, 100
வென்று - வெட்டி வென்று, 89
வேட்டுப் புழை யருப்பம் - வேட்டுவச் சாதியினுடைய சிறுவாயில்களையுடைய அரண்கள், 26
வேடு - வேட்டுவச் சாதியினுடைய, ந., வேடரின், ம., 26
வேண்டு - விரும்பும், 90
வேண்டு புலம் - விரும்பும் நிலங்கள், 90
வேழத்து - யானையினுடைய, 69
வேழம் - வேழத்தை, 69
வேறு, 43; வேறுபட்ட, ந., வேறு வேறான, ம., 43
வேறு பல் பெரும்படை - பாடை வேறுபட்ட பலவாகிய பெரிய படை, ந., வேறு வேறான பல பெரும் படைகள், ம., 43
வேறோர்., 43
வை - கூரிய, 73
வைந் நுனை - கூரிய முனை, 73
வைந் நுனைப் பகழி - கூ

ரிய முனையினையுடைய
அம்புகள், 73
வையகம் - உலகத்தே, 57
வையகம் வெலீஇய செல்
வோய் - உலகத்தே
பகைவரை வெல்லுதற்
குச் செல்கின்றவனே,
ந., நிலவுலகத்தை வென்
று கைப்பற்றுதற்குச்
செல்வோனே, ம., 57



# முல்லைப் பாட்டுப்
# பொருட்குறிப் பகராதி

அதிமதுரத் தழை : நூலில் 'இன்குளகு' என வருவது இது; இத் தழை, யானைக்கு உணவாக இடப்படுவதுண்டு; 33.

அம்பறத்தூணி : இது 'தூணி' எனக் கூறப்படுகின்றது. தரையில் வில் ஊன்றி அதன் நுனியில் இத் தூணியை இட்டுத் தொங்கவிடுவது வழக்கம்; 39. 'பார்ப்பார்' என்பதன் குறிப்புப் பார்க்க.

அம்பு : போரிற் பயன்படுத்தும் போர்க் கருவி; கூரிய நுனி அமைந்தது; போரிற் குதிரைகளின்மேற் பாதுகாவலாக இடப்பட்டிருக்குந் தோற் பரிசையினையுந் துளைத்துக்கொண்டு இந்த அம்பு அவற்றின் உடம்பில் அழுந்திவிடுவதும் உண்டு; 72-3.

மயிலின் உடம்பில் இந்த அம்பு அழுந்துவதானால், அஃது எவ்வளவு நடுங்குமென்பதை நாம் ஒருவாறு உற்றுக் கருதி அறியலாம்; 84.

அரசனுக்குப் படாம் வீடு : பகைப்புலக் காட்டிற் பாடிவீடமைக்கும்போது அதன் நடுவில் அரசன்

தங்குவதற்கும் ஒரு சிறந்த 'படாம் வீடு' (கூடாரம்) அமைக்கப்படும். இதனை யவனர்கள் புலிச்சங்கிலி விட்டு மாட்சிமையான இல்லமாக அமைப்பர்; இதனை அனைவரும் உடம்பட்டு விருப்பத்தோடு செய்வார்கள்; 43 - 4; இதன் அமைப்பு முதலிய வற்றைப் 'பாடிவீடு' என்பதன் குறிப்பிற் பார்க்க.

அருவி : இங்கே கூறப்படுவது, தலைவியின் மாளிகை யிலுள்ள கூடல்வாய்களில் ஒழுகும் மழைநீர் அருவி; 87. 'கூடல்வாய்' என்பது பார்க்க.

ஆய் மகள் : இடையர் மகள்; கார்காலத்தில் இவள் குளிரால் நடுங்குகின்றனள்; அதற்குச் சற்று அடக்க மாகத் தன் தோள்களைக் கையாற் கட்டிக்கொண்டி ருக்கின்றாள்; புல் மேயப் போன ஆக்கள் மாலைக்கால மாகியும் இன்னும் வாராமையால், மாட்டுக்கொட்டி லில் தாம்பினாற் கட்டப்பட்டுள்ள அவற்றின் இளங் கன்றுகள் பகலெல்லாம் முலையுண்ணாமை காரண மாக மிக்க வருத்தமுற்று, அந்த ஆக்களை எதிர்நோக் கிச் சுழன்று சுழன்று பார்த்து அலமருகின்றன. ஆய்மகள் இந் நிலைமையைக் கண்டு பரிவு கூர்ந்து, 'நும் தாய்மார், கோவலர் ஓட்டி வர இப்போதே

வந்துவிடுவர்' என்று அவற்றிற்கு ஓர் ஆறுதல் கூறுகின்றாள்; 12 - 6.

இழை : தலைமகள் அணிந்திருக்கும் அணிகலங்கள்; தலைமகனைப் பிரிந்து வருந்துதலால் அவளுக்கு உடம்பு மெலிந்து இழைகள் நெகிழ்கின்றன; 84.

உலகம் : அகலமான இடத்தையுடையது, 1; அலை வீசுகின்ற கடலாற் சூழப்பட்டது, 57.

ஊமை மிலேச்சர் : 65 - 6; 'மிலேச்சர்' என்பது பார்க்க.

ஊர் : பழைய ஊர் 'மூதூர்' எனப்படும். பகைவர் அணுகுதற்கரிய காவல் உள்ளது; ஊரின் பக்கத்தி லிருக்குஞ் சேரிகள் ' பாக்கம் ' எனப்படும். ஒரு கா ரியத்திற்காக ' விரிச்சி' என்னும் நற்சொல் கேட்க விரும்புவோர், அப் பாக்கம் வரையிற் சென்று கேட்டுத் திரும்புவர்; 7 - 11.

எழு நிலை மாடம் : செல்வத்திற் சிறந்த தலைவியின் மாளிகை எழு நிலைகள் அமைந்ததாகவுமிருக்கும்; மிகவும் உயர்ந்தது; நச். அது பொன்னாலும் மணி யாலும் சிறந்திருக்குமென்று கூறுவர். பருவ காலங் கட்குத் தக்கவாறு அது வெவ்வேறிடங்களில் ஏற்ற

அமைப்புகள் பெற்று இடஞ் சிறந்திருக்கும். ஆசிரியர் மறைமலையடிகள் இதனை முல்லைக்காட்டு மாளிகை யென்பர்; 86.

**கடகம் :** அரசன் தன் கையில் அணிந்திருப்பதோர் அணிகலன். போரிற் புண்பட்ட படைகளை நினைந்து, பாடி வீட்டில் அரசன் தன் பள்ளியறையில், ஒரு கையைப் படுக்கையில் வைத்துக், கடகம் அணிந்த மற்றொரு கையைத் தலையின்கீழ் வைத்துப் படுத்துக் கவலையோடிருப்பானென்பது; 75-6.

**கடல் :** குளிர்ச்சியானது; ஒலி முழங்கிக் கொண்டிருக்கும்; இதன் நீர் மேகமாய்ச் செல்கின்றது; 4 - 5; ஒலிக்கின்ற அலைகளையுடையது; 28.

**கண் :** தலைவியின் கண்கள் பூவைப்போலிருக்கின்றது; அவற்றில் மைதீட்டியிருக்கின்றதென்பது நச். உரையினால் தெரிகின்றது. தலைமகன் பிரிவாற்றாமையால் இக் கண்கள் துளித் துளியாய் நீர் சிந்துகின்றன; 23.

**கண்டம் :** வேறு வேறு நிறங்களால் அமைந்த கூறுபட்ட மதிள் திரைக்கு இச் சொல் வந்தது. இத் திரையைப்பற்றிய செய்தியைக் 'குத்துக்கோல்' என்

பதன் குறிப்பிற் பார்க்க. 'கண்டம்' என்பது கூறு; கூறுபட்ட வேறு வேறு வண்ணத் திரைகட்குப் பெயராய் வந்தது; இங்ஙனம் ஆகி வருதலால் நச். இதனை 'ஆகுபெயர்' என்றனர்; 44.

கண்ணி : இங்கே வஞ்சிமாலைக்கு வந்தது. பகைமேற் படையெடுத்துச்செல்லும் அரசனும் அவன் மறவரும் அணிந்துகொள்ளும் அடையாள மாலை; 'கண்ணி யென்பது தலைமாலையின் பெயராதலால், இவ் வடையாள மாலைகள் தலையில் அணிந்துகொள்ளப்படுவது மரபெனத் துணியலாம்.

பகையாசன் இருக்குமிடத்திற்கே சென்று அவனை வெல்லுதல் குறிக்கும் இம் மாலை அரசற்கு நல்ல புகழ் தருவதாகலின் 'நகை தாழ் கண்ணி' யெனவும் (78), தேனொழுகும் புதிய பூக்களால் தொடுத்தணியப்படுவ தாகலின், 'தேம் பாய் கண்ணி' (71) எனவுங் கூறப்படுகின்றது.

கரும்பு : உயர்ந்து வளருந் தன்மையுள்ளது; யானைக்கு இதனை உணவாக இடுவர்; 32.

கவலை முற்றம் : 32; 'யானை' என்பதன் குறிப்பிற் பார்க்க.

**கவளம்** : யானையின் ஒரு வாய் உணவுக்குப் பெயர்; 36. 'யானைப் பாகர்' என்பதும் பார்க்க.

**கன்று** : இங்கே கூறப்படுவது ஆன் கன்றுகள்; இவற்றின் தாய்மார் புல் மேய்வதற்கு வெளியே செல்லும் போது இவை வீட்டின் அருகிலுள்ள கொட்டிலிற் சிறிய தாம்பினுற் கட்டப்பட்டிருக்கும்; தாம்பினைக் காலில் இட்டுக் கட்டுவரென்று நச். கருதுகின்ருர். இங்ஙனங் கட்டப்பட்ட வருத்தத்தையுடைய கன்ருதலால் இவை 'பசலைக்கன்று' எனப்பட்டன வெனவும் அவர் உரைப்பர். அவர் கருத்துப்படி 'பசலை' என்பதற்கு 'வருத்தம்' என்பது பொருள். இனிப் 'பசலைக் கன்று' என்பதற்கு 'இளங் கன்று' எனவும் உரைக்கலாம். பகற் காலமெல்லாம் முலையுண்ணுமை லிருப்பது இவற்றிற்கு மிக்க வருத்தமாயிருக்கும். அதனுல் மாலைக் காலத்தில் இக் கன்றுகள், தம் தாய்மார் வருகையை எதிர்நோக்கிச் சுழன்று சுழன்று பார்த்துக்கொண்டு வருந்தும்; 12-3.

**காசாஞ் செடி** : இது நீலிற் 'காயா' எனப்படுகின்றது. சிறு காடுகளில் நுண்மணற் பாங்கான இடங்களில் இது வளர்ந்திருக்கும். இதன் இலைகள் நெ

ருங்கியிருக்கும்; மலர் கருநீல நிறமாய் மலரும். இம் மலரின் நிறத்திற்கு இங்கே 'மை' உவமமாகக் கூறப்பட்டிருக்கின்றது. கார்காலத் துவக்கத்தில் மழை பெய்ததும், இச் செடிகள் அரும்பெடுத்து மலரும்; 92-3.

**காந்தள் :** இது 'கோடல்' என்னும் பெயராற் கூறப்படுகின்றது; முல்லைக் காடுகளிற் செழித்திருக்கும்; இதன் மொக்குகள் மிகக் குவிந்திருக்கும்; அழகிய உள்ளங்கைகள்போல மலரும்; இது கார்காலத்து மலர்; 95.

**காற்று :** கார்காலத் துவக்கத்தில் இது சிறு சிறு மழைத் திவலையோடு வீசும்; மெத்தென வீசுவது முண்டு. இதனால், முல்லை நிலமெனப்படுங் குறுங் காடுகளிலுள்ள மோசி மல்லிகை முதலான கொடிகளும், அவை பூத்துப் படர்ந்திருக்கும் சிறு புதர்களும் அசைந்து ஆடும்; இத் தோற்றம் கவர்ச்சியாயிருக்கும்; 51 - 2. 'மோசி மல்லிகை' என்பதன் குறிப்புப் பார்க்க.

**கான்யாறு :** காட்டாறு; அகலமான பெரிய காடுகளில் ஓடுவது; படையெடுக்கும் அரசர், காட்டில்

இந்த ஆற்றங்கரையோரமாய்ப் பாடிவீடு அமைத்துக் கொண்டு போர் முடியும் வரையில் அங்கே தங்கி யிருப்பர்; 24; 27-8.

கிடுகு : போரிற் பயன்படுத்தும் ஒருவகைப் படை; அரசர்கள் பகைப் புலக் காட்டிற் பாடிவீ டமைக் கும்போது, கூடாரங்களுட் பாதுகாப்புக்காகச் சுற் றிலும் இக் கிடுகு படைகளை வரிசையாக ஊன்றி வைப்பர்; 41.

குத்துக் கோல் : நூலில் இதற்குக் 'காழ்' என்னும் பெயர் வருகின்றது; காழ் - கம்பு. பகைப்புலக் காட் டில் அமைக்கப்படும் பாடிவீட்டில் அதன் நடு வில் அரசனுக்காக ஒரு சிறந்த கூடாரம் அமைக்கப் படும். அதைச் சுற்றிலும் உயரமான இக் குத்துக் கோல்களைச் சிறிது தொலைவு விட்டு விட்டு நடுவர். முன்பே இவற்றில் வெவ்வேறு வகையான பல வண்ணத் திரைகள் பொருத்தப்பட்டிருக்கு மாத லால், இக் கோல்களை ஊன்றியதும், அஃதொரு வளைவான திரை மதிலா யமையும்; 44.

குதிரை : பகைப் புலக் காட்டிற் பாடி வீட்டில் தங்கி யிருக்குங் குதிரைகள் நடு இரவில் உறங்கிவிடுதலால்

அப்போது அவற்றின் கழுத்திற் கட்டப்பட்டிருக்கும் மணிகளின் ஓசை அடங்கிவிடும்; பாடி வீடு அமைதியாயிருக்கும்; 50.

தலைமகன், போரில் வெற்றிபெற்றுத் திரும்பும்போது அவன் அமருந் தேரிற் குதிரைகள் பூட்டப்படும். அவை விரைவாய் ஓட வல்லன. முல்லைக் காட்டின் செந்நிறமான நிலத்திலமைந்த மண் வழிகளிலும் விரைவாய் ஓடும். அவை, தாம் மேற்கொண்ட தொழில்களை எக்காலமும் விளங்கச்செய்யும். தலைவியின் மாளிகையை அணுகும்போது, இக் குதிரைகள், அவள் செவியிற் சென்று நிறையும்படி, கனைத்து மகிழ்ச்சியாய் ஆரவாரிக்கும்; 88-9, 97, 102-3.

'குதிரைப் படை' என்பதன் குறிப்புகளுங் கருதுக.

குதிரைச் சவுக்கு: குதிரைக்குச் சுருக்குத் தருஞ் சவுக்கு. நச். 'புரவியை அடிக்கின்ற சம்மட்டி' என்றார். நூலில் ' மத்திகை ' என்று கூறப்படுகின்றது. இதனை யவனர் தம் இடுப்பில், ஆடையின்மேல் வளைந்து கிடக்கும்படி செருகியிருப்பர்; 59. 'யவனர்' என்பதன் குறிப்பும் பார்க்க.

குதிரைப் படை : இவற்றின்மேற், போர்க்கருவிகள் அழுந்தாதபடி தோற் பரிசைகள் இட்டுவைப்பர். சில வேளைகளிற் பகைவரெறியும் அம்புகள் இத் தோற்பரிசைகளையுந் துளைத்துக்கொண்டு குதிரைகளின் உடம்பில் அழுந்திவிடும். அங்ஙனம் அம்பு அழுந்திய குதிரைகள் அன்றிரவிற் புல்லுண்ணாமல் தம் செவிகளைச் சாய்த்துத் துன்புற்றுக்கொண்டிருக்கும். அரசனும் இவற்றின் துன்பத்துக்குப் பெரிதிரங்கிப் பாடி வீட்டில் தன் பள்ளியறையில் ஒரு கையைத் தலையின்கீழும் மற்றொரு கையைப் படுக்கையின்மேலும் வைத்துப் படுத்துக் கவலையோடு நீள நினைந்தபடியாய்த் துயில் கொள்ளாமலிருப்பான்; 72-6.

குந்தக் கோல் : நூலிற் 'குந்தம்' எனவும், உரையில் 'எறிகோல்' எனவும் வருகின்றது. இது போரில் எறியும் ஒருவகைப் படை. இதன் தலையிற் பூத்தொழில் செய்யப்படுவதுண்டு. தலையென்றது அதன் நுனியை. அரசர்கள் பகைப் புலக் காட்டிற் பாடிவீடமைக்கும்போது கூடாரங்களுட் சுற்றிலும் பாதுகாப்பாக இக் குந்தங்களையும் ஊன்றி வைப்பர்; 41.

கூடல்வாய் : இது 'முடங்கு இறை' என்று நூலிலும், 'மூட்டு வாய்' என்று உரையிலுங் கூறப்படுகின்றது. கார் காலத் துவக்கத்தின் மாலையிற் பெருமழை பொழியும்போது தலைவியின் மாளிகையிலுள்ள இக் கூடல்வாய்களில் அம் மழைநீர் மிகவுந் திரண்டு அருவிகள்போல முழங்கி விழுகின்றது. இதன் ஓசை பலதிறத்ததாய் இனிமையாய்க் கேட்கின்றது. இவ்வோசை காதில் விழத், தலைவன் திரும்பி வருவதாகக் கூறிய காலம் இதுவாகலின் அவன் வரவினைக் கருதியவளாய்த், தலைவி படுக்கையிற் கிடக்கின்றனள்; 87.

கூடாரம் : சிறு சிறு கால்களை வட்டமாய் நட்டு அவற்றிற் கயிறுகளை வலித்துக் கட்டி அமைப்பது; ஆகலின் இது, 'கயிறு வாங்கு இருக்கை' என இங்கே கூறப்படுகின்றது. வாங்குதல் - வலித்துக் கட்டுதல். மேலும் சுற்றிலும் படாம் இட்டு அமைத்தலின், இவற்றிற்குப் 'படங்குகள்' என்பதும் பெயர். கூடமாகக் குத்தி அமைக்கப்படுதலின் 'கூடாரம்' எனப்பட்டது. கூடமாக - வளைவாக ; படையெடுத்துச் செல்லும் அரசர்கள் பகைப்புலக் காட்டிற்

பாடிவீ டமைக்கும்போது, அதன்கண் படைத்தலை வர்கட்காக இங்ஙனம் படாம் வீடுகள் (கூடாரங்கள்) அமைத்துத் தருவர்; 40. இவற்றின் நடுவில் அரச னுக்காகவும் ஒரு மாட்சிமையான படாம் இல்லம் அமைக்கப்படும்; 43 - 4.

கூரை : சாய்வாயிருக்கும் வீட்டின் இறப்பு. படை யெடுத்துச் செல்லும் அரசர்கள், முல்லைக் காட்டிற் பாடிவீ டமைக்கும்போது, அதன்கண் போர் வீரர்கள் தங்குவதற்காகச் சுற்றிலுந் தெருவு போல நெடுக அறைகள் வகுத்து அவற்றின்மேல் தொடர்பாகக் கூரை வேய்ந்திருப்பர். கூரை அங் கே காட்டுத் தழைகளால் அமைக்கப்படும். ஆதலின் அதனை 'உவலைக் கூரை' யென்பர் ஆசிரியர். அது தெருவொழுங்காய்த் தொடர்ந்தமைதலின், 'கூரை ஒழுகிய தெரு' எனவும் நூலிற் கூறப்பட்டது; 29.

கோம்பு ஊதுதல் : பகைமேற் சென்ற அரசன் வெற் றி பெற்றுத் திரும்பும்போது, வெற்றிக் களிப்புத் தோன்ற ஊது கொம்புகள் ஒலிக்கப்படும். இவற் றோடு சங்கும் முழங்குவதுண்டு; 92.

கொன்றை : இம் மரம் முல்லை நிலங்களில் மிகுதியாயிருக்கும். கார் காலத்தில் தளிர்த்துப் பொன்னிறமான பூக்களைப் பூக்கும். பூக்கள் கொத்துக் கொத்தாயிருக்கும். இப் பூக்களின் இதழ்கள் மிக எளிதில் உதிர்ந்துவிடும். இதனை ஆசிரியர் 'பொன் சொரிகின்றது' எனக் கூறி மகிழ்கின்றார்; 94.

கோவலர் : இவர்கள் ஆன் மேய்ப்போர். பகலில் ஆக்களைப் புல் மேயவிட்டு மாலைக்காலமானதும் அவற்றைப் பின்னே நின்று செலுத்திக்கொண்டு வீட்டுக்கு ஓட்டி வருவர். கையிற் கோல்கள் வைத்திருப்பர்; ஆக்களை அதட்டிச் செலுத்துதற்கு அவை பயன்படுதலால், இங்கே 'கொடுங் கோல்' எனப்பட்டன; 14 - 6.

சங்கு ஊதுதல் : 92; 'கொம்பு ஊதுதல்' என்பது பார்க்க.

சட்டை : அரசனுக்கு மெய்காப்பாளரா யிருப்போர், தமதுடம்பிற் சட்டையிட்டுக் கொள்வர்; 53.

யவனரும் சட்டையிட்டுக் கொள்வர். நூலில் இச் சட்டை 'மெய்ப்பை' எனப்படுகின்றது. 'மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து......யவனர்' என்

னுங் குறிப்பால் அவரணியுஞ் சட்டை உடம்போடு இறுக்கமாயிராமல், அவர் அதனுட் புகுந்திருப்பது போல் தளர்வாய், மிக நீளமாய், அஞ்சுதற்கேதுவா யிருக்குமெனத் துணியலாம்; 60.

அரசன் பள்ளி யறைக்குமுன் காவலிருக்கும் ஊமை மிலேச்சருந் தமதுடம்பிற் சட்டையிட்டுக் கொள்வர். இங்கே சட்டைக்குப் 'படம்' என்பது பெயராக வருகின்றது; 66.

சிவந்த நிலம்: முல்லைக் காடுகளின் நிலம் செந்நிறமா யிருக்கும். கார்காலத்தில் மழை பெய்யுங் காலங்களில் இந் நிலம் நிறம் மிகுந்து தெரியும். இக் காட்டு நிலத்தில் அகலமான வழிகளும் உண்டு; 97.

செஞ்சோற்றுக் கடன்: ஆசிரியர் இதனைச் 'சோறு வாய்த்தல்' என்று குறிக்கின்றார். 'வாய்த்தல்' என்னுங் குறிப்பால், அக் கடனைத் 'தப்பாமற் கழித்தல்' என்னும் பொருள் பெறப்படும். போர் வீரர்கள் நீண்டகாலமாகவே அரசன் இட்ட உணவினால் உயிர் வாழ்ந்தவர்களாதலால் அதற்கேற்றபடி அவர்கள், போரிற் கடமை வழுவாமல் நடந்துகொண்ட முறைமையே அது.

போர்வீரர்கட்குப் போர் நேர்ந்தால் மட்டுமே வேலை உண்டு; மற்ற நேரங்களில் வேலை இல்லை. அக் காலங்களிலெல்லாம் இங்ஙனந் தொழிலொன்று மின்றி வசதியாய் உண்டு வருதலால் அவ் வுணவு 'செஞ்சோறு' எனப்பட்டது. செஞ்சோறு - நல்ல சாப்பாடு.

பகையரசர் யானைகளை வெட்டியும் உயிரைத் துறந்தும் தம் அரசற்கு வெற்றியுண்டாக்கி, அவர்கள் அச் சோற்றுக் கடன் கழித்தமை இங்கே கூறப்படுகின்றது; 71 - 2.

செவி : போர்க் களத்தில் அம்பு தைக்கப்பட்ட குதிரைகள் அதன் துன்பத் துக்காற்ருமல் தங் காதுகளைச் சாய்த்துக்கொண்டு புல்லுண்ணுமலுங் கிடந்து வருந்தும்; 72 - 4.

கார்காலத் துவக்கத்தில் ஒருநாள் மாலையில் தலைவன் வரவை எதிர்நோக்கிக்கொண்டு தன் மாளிகையிற் படுக்கையிற் கிடக்குந் தலைவியின் காதுகள் நிறையும்படி, தலைவன் ஏறிவருகின்ற தேரிற் பூட்டிய குதிரைகள் மகிழ்ச்சியோடு கனைத்து ஆரவாரித்தன வென்பது; 89, 103.

**தலைக்கட்டு :** அரசனுக்கு மெய்காப்பாளராயிருப்போர், தலையிற் பாகை கட்டிக்கொள்வர்; 53. 'மெய்காப்பாளர்' என்பது பார்க்க.

**தலைமகள் :** கார்காலத் துவக்கத்தில் வருவதாகக் கூறிப் பகைமேற் படையெடுத்துச் சென்ற தலைவனை நினைந்து, தலைவி, அக் கார் காலத் துவக்கத்தில் முதற் பெயல் பொழிந்த முதல் நாள் மாலையில், பிரிவாற்றாமையால் வருந்துகின்றாள். அருகிலிருந்த பெரிய முதிர்ந்த பெண்கள் தாம், தலைமகன் வருதற்கே துவான நற்சொற் கேட்டமை கூறிப் பலவாறு வற்புறுத்தி ஆற்றுவித்தும் அதனால் ஆறுதல் பெறாமற் கலக்கம் மிகுகின்றனள். அவள் மலர்போலுங் கண்களில் நீர் துளித் துளியாய்ச் சிந்துகின்றது.

பகைமேற் பிரிந்துசென்ற தலைவனோ, முன் நாட்களிலெல்லாம் நடைபெற்ற போர் நிகழ்ச்சிகளாற் கவலைகொண்டு தன் பாசறையில் துயில்கொள்ளாதிருந்தானாயினும், கடை நாட் பகலில் தன் போரை வெற்றியுடன் முடித்துக்கொண்டு, அன்றிரவில், மறுநாள் மாலை தலைவியைக் காணலாம் என்னுங் களிப்புடன் இனிதாகத் துயில் கொள்கின்றான்.

இங்ஙனம் இனிதாகத் துயில்கொள்வோனைத் தன் பக்கலிற் காணாத தலைமகள் மேன்மேல் துயர் மிகுகின்றாள்; தான் வருங் காலங் குறித்து அதுவரையில் ஆற்றியிருவெனத் தலைவன் சொன்னவழியிலே தன் உள்ளத்தை நிறுத்தினாலும், அவள் தனிமை அந் நிறையைக் கெடுக்கின்றது. எனினும், இவ் வுலகியலில், தலைவன் ஒரோவொருகாற் பிரியவேண்டியிருக்குங் கட்டாயமும் தான் அக் காலங்களில் ஆற்றியிருக்கவேண்டிய கடமையுமெல்லாம் நெடுக நினைந்து தன்னை ஒருவாறு தேற்றிக்கொண்டு, தன் கழலும் வளைகளையுங் கையிற் செறித்துக் கொள்கின்றாள். ஆயினும் பிரிவினை ஆற்றக்கூடாமையால், மீண்டுங் கலக்கமுண்டாகி விரையப் பெருமூச்செறிந்து அம்பு தைத்த மயில்போல நடுங்கி, அந் நடுக்கத்தால் மீண்டும் அணிகலங்கள் நெகிழப், படுக்கையிற் கவலையுடன் கிடக்கின்றனள்.

மாலை நேரமாய் விட்டமையால் அப் படுக்கையறையின் ஒரு பக்கத்திற் பாவை விளக்கு எரிகின்றது. கார் காலத் துவக்கத்தின் முதற் பெயல் அம் மாலையில் மிகுதியாய்ப் பொழிதலால், அவளிருக்கும்

எழுநிலை மாடத்தின் கூடல்வாய்களில் மழைநீர் வெவ்வேறொலிகளுடன் அருவிபோல் ஒழுகுகின் றது. அவை தன் காதில் விழத், தலைவன் வரவை மேன்மேலுங் கருதியவளாய்த் தலைவி கவலையோ டிருக்கும்போது, அவள் காதுகள் நிறையும்படி, தலைவன் வருகின்ற தேரிற் பூட்டிய குதிரைகள் இடு மென ஆரவாரித்தன; 6, 20-3., 80-9; 103.

தலைமகன் : இப் பாட்டுக்குத் தலைமகன் அரசன்; இவன், கார் காலத் துவக்கத்தில் திரும்பிவருவதா கத் தன் தலைவிக்கு உறுதிகூறி அவளைப் பிரிந்து பகைநாட்டின்மேற் படையெடுத்துச் செல்கின்றான். கார்காலந் துவங்கிவிட்டது. அதுகாறும் ஒருவாறு பொறுத்திருந்த தலைவி அப்போது முதற்பெயல் பெய்தல் கண்டு பெரிதும் வருந்துகின்றனள். அரு கிருந்த பெரிய முதிர்ந்த பெண்டிர், தாம் தலைவன் வருதற்கேதுவான நற் சொற் கேட்டமை கூறிப் 'போரில் நின் தலைவன் வெற்றிபெற்றுப் பகையரசர் நிலங்களைக் கைப்பற்றி அவர்கள் தருந் திறைப்பொ ருள்களுங்கொண்டு வினை முடித்து உடனே வரு

வது உண்மை' என்று சொல்லித் தேற்றுகின்றன ராயினும், அவள் துன்பம் மிகுந்தே வருகின்றது.

பகைமேற் சென்ற தலைவன், பகைப் புலக் காட்டில் அமைக்கப்பட்ட பாசறைக்கண், தனக்கென்று யவனர்களாற் புலிச் சங்கிலி விட்டு மாட்சிமையாகச் சமைத்த நல்ல படாம் இல்லில், தலைக்கட்டும் சட்டையும் இட்ட மெய்காப்பாளர் காவல் புரிய, மங்கைப் பருவத்துப் பணிப்பெண்கள் தமது கச்சில் வாள் செருகியவர்களாய் அங்கு ஏற்றப்பட்ட விளக்குகள் அவியுந்தோறும் அவற்றை ஏற்றிக்கொண்டிருக்க, நள்ளிரவானதும், நாழிகை வட்டிலால் நாழிகை தெரிந்து அரசனுக்கு அறிவிப்போர் அது தெரிவிக்க, அந்த இல்லத்தில் வலிய கயிற்றில் திரையை வளைத்துப் புறத்தொன்றும் உள்ளொன்றுமாக வகுத்த பள்ளியறைகளுள், புறத்தறையிற் சட்டையிட்ட ஊமை மிலேச்சர்கள் காவல் செய்ய, மணி விளக்கு வைக்கப்பட்ட உள்ளறையிற் சென்று அமளிமேற் படுக்கின்றான்.

படுக்கின்றவன், மறுநாள் மிகுதியாகச் செய்ய வேண்டியிருக்கும் பெரும்போரை விரும்புதலால்

துயில்கொள்ளாமல், அந் நாட்போரிற் புண்பட்ட யானை குதிரைகளையும், செஞ்சோற்றுக் கடன் கழித்து இறந்தொழிந்த வீரர்களையும் மனத்துட் கொண்டு, ஒரு கையைப் படுக்கையின்மேல் ஊன்றி மறு கையைத் தலையின்கீழ் வைத்து நீள நினைந்து கொண்டிருக்கின்றான்.

மறுநாள், பகைவர்களைக் கருதிப் படையெடுத்த கைகளால் அவர்களைப் புறங்கண்டு வெற்றிகொள்கின்றான், பகையரசர் நடுங்க அவன் பாசறைக்கண் வெற்றி முரசம் முழங்குகின்றது. அன்றிரவு, மறு நாள் மாலையில் தலைவியைக் காணலாம் என்னும் மகிழ்ச்சியுடன் தன் பாசறைப் பள்ளியில் இனிய துயில்கொள்கின்றான்.

இவனைத் தன் பக்கலிற் காணாத தலைவி தன் மாளிகையில் இவன் வரவை எதிர்நோக்கி வருந்திக் கொண்டிருக்கின்றாள்.

மறுநாள், விரைந்து செல்லுங் குதிரைகள் பூட்டிய தேரில், அக் குதிரைகளின் விரைவில் அமைதியடையாமல் மேலும் விரைவாய்ச் செலுத்திக்கொண்டு கொம்பும் சங்கும் முழங்க முல்லைக் காட்டுச் செந்

நிலப் பெருவழியில், தலைவன் வருகின்றான். வழியிற் கார் கால மழைச் சிறப்பினுற் காடுகள் தழைத்து மலர்ந்திருக்கின்றன. 'இரலை' என்னும் ஒருவகை மான்கள் புல்லுந் தண்ணீரும் நிரம்ப உண்டு மகிழ்ச்சி மிகுதியால் அங்குள்ள வரகங் கொல்லைக ளில் தம் துணையுடன் கூடித் துள்ளுகின்றன. தலை வியையே நினைந்து வருந் தலைவனது வேட்கை இக் காட்சிகளாற் பின்னும் மிகுதிப்படுகின்றது.

தலைவியின் மாளிகையை அணுகியபோது தலைவ னது தேரிற் பூட்டிய குதிரைகளின் ஆரவாரக் கனைப்பொலிகள், அவள் காதுகளிற் சென்று நிறைந் தன; 19, 43 - 80, 89 - 103.

திரை : பாடி வீட்டின் நடுவில் அரசனுக்கென அமைக் கப்படுந் தனி இல்லத்தில், வலிய கயிற்றினுல் இத் திரைகளை வளைய வைத்துப் புறவறையும் உள்ள றையுமாகப் பள்ளியறை அமைக்கப்படுவதுண்டு; 63 - 4.

திறை : போரில் தோற்றுப்போன பகையரசர்கள், வெற்றிபெற்ற அரசனுக்குக் கொடுக்குந் திறைப்பொ ருள் இங்கே கூறப்படுகின்றது; திறை - கப்பம்; 19.

தும்பிக்கை : யானை, சில வேளைகளில், தும்பிக்கையைத் தன் கொம்புகளின்மேல் தொங்கவிட்டுக் கொண்டிருக்கும்; 34.

இனி விரும்பாமலிருக்கும்போது அது, தனக்கு உணவாக இடப்பட்டிருக்கும் கரும்பு, நெற்கதிர்க் கட்டு, அதிமதுரத்தழை முதலியவற்றைத் தனது நெற்றியில் துடைத்துக்கொண்டும், தனது வளைந்த தும்பிக்கையில் வைத்துக்கொண்டுமிருக்கும்; 31-4.

போர்க்களத்தில் யானைகளின் தும்பிக்கைகள் வாளால் வெட்டுண்டு விழும்போது, அக் கைகள் பாம்பு பதைப்பதுபோற் பதைக்குமெனக் கூறப்படுகின்றது; 69-70.

தேர் : பகைமேற் சென்ற அரசன், போரில் வெற்றி பெற்று மீளும்போது குதிரைகள் பூட்டிய தேரில் ஊர்ந்துவருவான்; இத் தேர் பெரியது. இது முல்லைக் காட்டின் செந்நிலத்திலமைந்த மண் வழியிலும் விரைவாய் ஓடவல்லது; 97, 103.

தேன் : இது வஞ்சிப் பூக்களில் மிக்கொழுகும். அரசனும் அவன் மறவர்களும், பகைமேற் செல்வதன்

அடையாளமாக இப் பூக்களாலான வஞ்சிமாலையை அணிந்துகொள்வர்; 71.

தோல் பரிசை : இதனைக் குதிரைப் படைகளுக்கு இடுவர். போரிடும்போது போர்க் கருவிகள் அழுந்தாமலிருப்பதற்காக அங்ஙனம் இடப்படும். சில வேளைகளில் அம்பு முதலியன இப் பரிசையினையுந் துளைத்துக்கொண்டு குதிரையின் உடம்பில் அழுந்தி விடுவதுண்டு. 'தோல்' எனவும் 'பக்கரை' எனவும் இது நூலுரைகளிற் குறிப்பிடப்படுகின்றது; 72-3.

தோன்றிப் பூ : முல்லைப் புறவுகளில் மலருங் கார் காலத்து மலர்; இது மிகச் சிவப்பாயிருக்கும். இரத்தம்போற் பூக்குமென்று உவமை கூறப்படுகின்றது. இம் மலர் திரண்டிருக்கும்; இதில் இதழ்கள் மிகுதி; 96.

நாழி : 'விரிச்சி' என்னும் 'நற்சொல்' கேட்கச் செல்லும்போது பெரிய முதிய பெண்டிர், இந்த முகந்தளக்குங் கருவியில் நெல் கொண்டு போவர்; இதன் கண் முல்லை மலருங் கொண்டுபோவ துண்டு; 8-9.

நாழிகை வட்டில் : நீர் பெய்த அகலமான பெரிய கலத்தில் அந் நீர் உட்கசிந்து வரும்படி மிக நுண்

ணிய புழைகள் அமைந்த ஒரு வட்டமான கிண்ணம் இட்டு வைக்கப்படும். அதனுள் இவ்வளவு நீர் கசிந்தவா இவ்வளவுநாழிகையாகுமென்று கணக்குண்டு. இரா நேரங்களில் இக் குறிப்புக்கொண்டு நாழிகை அளந்துபார்த்து அரசனுக்கு அறிவிப்பது வழக்கம். இக் கருவி அரசனுக்குரியது. நீர் பெய்த அகலமான பெரிய கலம், உரையிற் 'குடாரம்' எனப்படுகின்றது. நாழிகையறிதற்குக் கருவியாய் அதனுள் இடப்படுகின்ற வட்டக் கிண்ணம் 'கன்னல்' என்று நூலிலும், 'நாழிகை வட்டில்' என்று உரையிலுங் குறிப்பிடப்படுகின்றது. இதன்கட் கசியும் நீர் சிறிதளவாயிருத்தலால், இது 'குறுநீர்க் கன்னல்' எனப்பட்டது; 57-8. 'பொழுதறிந்து சொல்வோர்' என்பதன் குறிப்பும் பார்க்க.

நிலம் : இதற்குப் 'புலம்' என்பதும் பெயர்; அரசர்கள் இவற்றை எக்காலமும் விரும்பி நிற்பர்; 90. முல்லைக்காட்டு நிலம் செந்நிறமா யிருக்கும்; 97.

நெய் உமிழ் சுரை : இஃது எண்ணெய்க் கலன்; இதன்கண் எண்ணெய் சொரிவதற்குக் குழாய் போன்ற வாய் இருக்கும். அக் குழாயின்மேல் திரிக

ளும் வைக்கப்பட்டிருக்குமாதலால், இச் சுரை 'நிரிக்குழாய்' எனவும் வழங்கும். பகைப் புலக் காட்டில் அரசன் தங்கும் பாடிவீட்டில், இரவு வந்ததும், சிற்றாட்கள் இந்த நெய்யுமிழ் சுரையைக் கையிலெடுத்துக்கொண்டு அங்கங்குஞ் சென்று, விளக்குகளில் எண்ணெய் விட்டுப் பெரிய திரிகளிட்டு ஏற்றுவர்; 48 - 9. விளக்குகட்கு எள்நெய்யே யல்லாமற் பிறவும் பயன்படுத்துவ துண்டாகலின், அவற்றை ஊற்றிவைத்திருக்குங் கலன் பொதுவாக 'நெய் உமிழ் சுரை' எனப்பட்டது.

நெல் : 'விரிச்சி' என்னும் 'நற்சொல்' கேட்கும்போது பெரிய முதிர்ந்த மகளிர், மலர்களோடு இந் நெல்லுந் தூவித் தெய்வம் வணங்கிப் பின், அது கேட்டு நிற்பது வழக்கம்; நெல்லை 'நாழி' என்னும் ஓர் அளவு கருவியிற் கொண்டுபோவர்; 8 - 9.

நெற் கதிர் : இது வயல்களில் நன்றாய் விளையும். இதனை யானைக்கு உணவாக இடுவர்; இடும்போது இக் கதிர்களை நெருங்கக் கட்டிக் கட்டுக் கட்டாக இடுவது வழக்கம்; 32 - 3.

நேமி : இதனைச் 'சக்கர' மாகிய கருவியென்றும், 'சக்கர' மென்னும் இரேகையென்றுங் கூறுப. இரண்டுந் திருமால் கைகளிற் காணப்படும்; 1 - 2.

படாம் வீடு : 43 - 4; 'அரசனுக்குப் படாம் வீடு' என்பது பார்க்க.

படுக்கை : 75; 'பள்ளியறை' என்பதன் குறிப்புப் பார்க்க.

படை : சேனை; பகையரசர்கள்மேற் படையெடுத்துச் செல்லும் அரசன் தனக்குத் துணையாகப் பல்வேறு சேனைகளை மிகுதியாகத் திரட்டிச்செல்வான். பலவேறு மொழிகள் பேசுஞ் சேனைகளும் அரசன் படையிலிருக்குமென்பது நச். உரையிலிருந்து தெரிகின்றது. பகைப்புலக் காட்டிற் பாடிவீடமைக்கும் போது இப் பல்வேறு வகையான சேனைகளின் படைத் தலைவர்கட்குப் பல கூடாரங்கள் சூழ அமைக்கப்படுவதுண்டு. இவற்றின் நடுவில் அரசன் தங்குவதற்குஞ் சிறந்த படாம் மாளிகை (பெரிய கூடாரம்) அமைக்கப்படும்; 43.

இப் படைக்குத் 'தானை' யென்னும் பெயரும் நூலில் வருகின்றது. அரசன் வெற்றிபெற்று வினை

வாய்த் திரும்பும்போது, மகிழ்ச்சியால் இச் சேனைக ளும் விரைவாய்த் திரண்டு வரும் என்பர் நச்.; 90.

பணிப் பெண்கள் : இவர்கள் படையெடுத்துச்செல் லும் அரசர்களோடு உடன் செல்பவர்கள். பலர் செல்வார்கள்; எல்லாரும் மங்கைப் பருவம் வாய்ந்த இளம்பெண்கள்; முன்கையிற் சிறிய வளையல்கள் அணிந்திருப்பர். கூந்தல் அசைந்துகிடக்கின்ற அழ கான சிறிய முதுகுடையவர்கள். தமது மார்பிற் கட் டும் நிற நிறமான கச்சில், வலிய பிடி யமைந்த குறு வாள் (உறையுடன்) வைத்துச் செருகியிருப்பர். அந்த வாள், இரவைப் பகலாக்கும் என்று சொல் லும்படி அவ்வளவு ஒளியுள்ளதா யிருக்கும். அரசன் பகைப்புலக் காட்டில் இறங்கிப் பாடி வீடு அமைத்த பின், அவனுக்கெனத் தனியாக அமைக்கப்பட்ட வண்ணத் திரைகளாலான சிறந்த கூடாரத்தில், இரவு வந்ததும், சிற்றூட்கள் எங்கும் ஒழுங்காய் விளக்கேற்றிச் சென்றபின், இப் பெண்கள் நெடுநே ரம் கண் விழித்திருந்து அவ் விளக்குகள் அவியும் போதெல்லாம் அங்கங்குஞ் சென்று அவற்றைத் தம் கைவிளக்குகளால் ஏற்றிக்கொண்டிருப்பர்; 45 - 9.

**பரிக்கோல்:** நூலிற் 'கவை முட் கருவி' என வருகின்றது; 35. 'யானைப்பாகர்' என்பது பார்க்க.

**பள்ளியறை :** பாடி வீட்டின் நடுவில் அரசனுக்கென அமைக்கப்படும் தனி இல்லத்தில், வலிய கயிற்றில் திரைகளை வளைய வைத்துப் புறவறையும் உள்ளறையுமாகப் பள்ளியறைகள் அமைப்பதுண்டு. உள்ளறையில் அரசன் பள்ளி கொள்வான். அதனுள் 'மணி விளக்கு' ஒளிரவைத்திருப்பர். 'மணி விளக்கு' என்பது பார்க்க. புறவறையிற் சட்டையிட்ட ஊமை மிலேச்சர் அருகிருந்து காவல் புரிந்துகொண்டிருப்பர்; 63 - 6.

சில நேரங்களிற் போர்க்களத்திற் புண்பட்ட படைகளை நினைந்து, அரசன், ஒரு கையைப் படுக்கையின்மேலும் மற்றொரு கையைத் தலையின் கீழும் வைத்துக் கவலையுடன் படுத்திருப்பான்; 75 - 6.

இனித் தலைவியின் மாளிகையிலுள்ள பள்ளியறையில் அவள், கார்காலத் துவக்கத்தின் மாலையில் தலைவன் வரவை எதிர்பார்த்துக்கொண்டு, அந் நேரத்திற் பெய்யும் பெருமழையினால் தனது எழுடுக்கு மாளிகையின் கூடல்வாய்களில் அருவிபோல் மிகு

தியாய் ஒழுகும் மழை நீரின் பல்வேறு வகையான இனிய ஒலிகள் காதில் விழப், பிரிவாற்றாமையால் அம்பு தைத்த மயில்போற் படுக்கையிற் கிடப்பள். அவ்வறையிற் பாவை விளக்குகள் பெரிய சுடரோடு எரிந்துகொண்டிருக்கும்; 85 - 9.

பாசறை : இது 'பாடிவீடு' என்றுங் கூறப்படும். அரசன் பகை நாட்டின்மேற் படையெடுத்துச் செல்லும் போது அந் நாட்டுக்கு அருகேயுள்ள காட்டில், போர் நிகழும் வரையிற் படையுடன் தங்குவதற்காக இப் பாசறை அமைக்கப்படும். முதலில் அக் காட்டிலுள்ள பிடவஞ் செடிகளையும் சிறு புதர்களையும் அழித்து அகலமாக இடமாக்கிக்கொண்டு பின் அக் காட்டிலுள்ள முட்களை வெட்டிச் சூழ இட்டுத் தக்கவாறு முள்மதில் வளைத்துக்கொள்வர். அக் காட்டிற் காவலிருக்கும் வேடரின் காவற் கோட்டைகளையெல்லாம் அழித்துவிடுவர்.

ஓரிடத்தில் இம் முள்மதிலின் உட்பக்கம் ஒரு முற்றம் அமைக்கப்படும்; அங்கே யானைகளைக் காவல் வைப்பர்; அந்த முற்றத்திலிருந்து உள்ளே பலமுகமாகத் தெருக்கள் பிரிந்துசெல்லும்; அத

ஞல் இம் முற்றம் 'கவலை முற்றம்' எனப்பட்டது. ஒரு வழியிலிருந்து மற்ருெரு வழி பிரியுமிடத்துக்குக் 'கவலை' யென்பது பெயர்.

இனி,முள் மதிலை யடுத்து அதன் உட்பக்கமாய்ச் சுற்றிலுஞ் செல்லுந் தெருக்களில் எல்லாப் படைகளுந் தங்குதற்கு அறைகள் வகுக்கப்படும். அறையறையாகத் தடுத்து மேலே பசிய இலைகளாற் கூரை வேய்வர். இக் கூரைகள் ஒரே தொடர்பாகத் தெருவொழுங்காய்க் காணப்படும்.

சேனைகள் தங்கும் இத் தெருக்களை அடுத்து, அவற்றின் உட்பக்கமாய்ச் சேனைத் தலைவர்கட்காகச் சுற்றிலுங் கூடாரங்கள் வகுக்கப்படும். ஒவ்வொரு கூடாரமும், வட்டமாகச் சிறு சிறு கால்கள் நட்டு அவற்றிற் கயிறுகளை வலித்துக் கட்டி மேலே படாம் விரித்து அமைக்கப்பட்டிருக்கும். இவை நடுத்தரமானவை. இக் கூடாரங்களுட் சுற்றிலும் விற்களை நட்டு அவற்றில் அம்பறுத் தூணிகளைத் தொங்கவிட்டிருப்பர். இவ் வில் வளைவே அரணாக அதனுள் அப் படைத்தலைவர்கள் தங்குவர். அவ் வில் வளைவை அடுத்து அதன் உட் பக்கமாய்ச் சுற்றிலும்

நீண்ட குந்தக் கோல்களை ஊன்றி வைத்திருப்பர். அவற்றையடுத்துக் கிடுகு படைகளையும் வரிசையாய்க் குத்திவைப்பர்.

இங்ஙனம் அமைக்கப்பட்ட இப் படைத் தலைவர்களின் கூடாரங்களுக்கு நடுவில், அரசன் தங்குவதற்காக எல்லாரும் உடம்பட்டு விருப்பமாய் ஒரு நல்ல இல்லம் வகுப்பர். அந்த இல்லமும் வலிய திரைகளாலான ஒரு படாம் மாளிகையேயாம். ஆனால் அஃது உயர்ந்த முறையில் அமைக்கப்பட்டிருக்கும். அந்த இல்லத்தைச் சுற்றி நீண்ட குத்துக் கோல்கள் நட்டுப் பலவண்ணத் திரைகளால் உயர்ந்த மதில் வளைத்திருப்பர். குத்துக் கோல்களோடு வண்ணத் திரைகள் முன்பே பொருத்தப்பட்டிருக்கும். கோல்களை இடம் விட்டு விட்டு வளைவாய் நட்டதும், திரைமதில் அப்படியே அமைந்து தோன்றும்.

இனி, அதனுள் அமைக்கப்படும் இல்லம், பல வசதிகளுடன் யவனர்களாற் புலிச்சங்கிலிவிட்டு மாட்சிமையாக இயற்றப்படும். விளக்குகள் ஒழுங்காய்ப் பொருத்தப்பட்டிருக்கும்; அவை பெரிய திரியுள்ளவை. இராப்பொழுது வந்ததும், சிற்றாட்கள், எண்

ணெய் உமிழும் திரிக்குழாய்களைக் கையிற்கொண்டு விளக்குகளை முறையே ஏற்றிச் செல்வர், பின்பு அவை அவியுந்தோறும், அங்கே பணிபுரியும்பொருட்டு அரசனுடன் சென்றிருக்கும் மங்கைப் பருவத்துப் பெண்கள் நெடுநேரங் கண்விழித்திருந்து அவற்றைத் தங் கைவிளக்குகளால் ஏற்றிக்கொண்டிருப்பர். இப் பெண்கள் தம் மார்பிற் கட்டிய நிறம் விரவின கச்சுகளில் (உறையுடன்) வாள் வைத்துச் செருகி யிருப்பர்.

இராக் காலங்களில் அவ் வில்லத்தைச் சுற்றி அரசனுக்கு மெய்காப்பாளர்கள் காவல் காத்திருப்பர். நாழிகை கணக்கிடும் நாழிகைவட்டில் அங்கு வைத்திருந்து அவ்வப்போதும் அரசனுக்கு நாழிகை அறிவிக்கப்படும். நகரத்தில் அரசனது அரண்மனையில் அவ்வப்போதும் மணியடிப்பதுபோல, இப் பாசறையின்கண்ணும் மணியடிப்பதுண்டு. அரசன் பணிகள் அடங்கிவிடும் நள்ளிரவில் அம் மணியை எறிந்துவிடுதல் மரபு. பாடிவீட்டிலுள்ள யானை குதிரைகளும் உறங்கிவிடுதலால் அந் நேரத்தில்

அவற்றின் மணியோசைகளும் அடங்கி அமைதியா யிருக்கும்.

அரசன் படுத்துக்கொள்ள விரும்பியதும் பள்ளி யறைக்குச் செல்வான். பள்ளியறை அந்த இல்லத்தின் நடுவில் அமைந்திருக்கும். உள்ளறைக்குமுன் அதனைச் சூழப் புறவறை ஒன்றுண்டு. இரண்டும் வலிய கயிற்றிற் கட்டிய திரைகளால் அமைந்தவை. உள்ளறையில் அரசன் பள்ளிகொள்வான்; அங்கே மணிவிளக்கு ஒளிரவைத்திருக்கும். புறவறையிற் சட்டையிட்ட ஊமை மிலேச்சர் சுற்றிச் சுற்றிக் காவல் புரிந்துகொண்டிருப்பர்.

கான்யாறு சூழ்ந்த நீளமான பெரிய காட்டில் இப் பாடி வீடு கடல்போல் அகலமாய் அமைக்கப் படும். அரசன் வெற்றி பெற்றவுடன், பகையரசர் நடுங்கும்படி இப் பாசறையில் வெற்றி முரசு முழங் கும்; 24-79. முல்லைநிலத் தூர்கட்குப் 'பாடி' யென் பது பெயராதலின், பல வீடுகள் அமைந்து ஓர் ஊர்போற் காணப்படும் இப் பாசறையும் 'பாடி' யெனப்பட்டது. போர்க்குப் படைப் பெருக்கமே முதன்மையாதலால், இப் பாடிவீட்டிற் சேனைகள்

தங்கியிருக்கும் பாசறைகளே ஏராளமாயிருக்கும். 'பாசறை' என்பது, பசிய இலைகளாற் கூரை வேயப் பட்ட அறைகள்; இக் காரணத்தால் இப் பாடிவீட் டுக்குப் 'பாசறை' யென்பதும் பெயராம்.

**பாம்பு:** போர்க் களத்தில் வாளால் வெட்டுண்டு விழுந்த (யானைகளின்) தும்பிக்கைகள், பாம்பு பதைப்பதுபோற் பதைக்குமென்பது; 69-70.

**பார்ப்பார்:** துறவிகள்; காவிக்கல்லிற் சாயந்தோய்த்த காவியாடையை உடுத்திருப்பார்கள். தவநிலையுடை யவர்கள். கையில் முக்கோல் வைத்திருப்பார்கள். இதனால் இவர்கள் 'முக்கோல் அந்தணர்' எனப்படு தலும் உண்டு. இவர்கள் இந்த முக்கோலை நிலத்தில் ஊன்றி அதன்மேல் தம் காவியாடையை இட்டு வைத்திருப்பதுண்டு. ஆடை அந்த முக்கோலிற் சரிந்து தொங்கிக்கொண்டிருக்கும். இந்தத் தோற்றம், அரசர்கள் பகைப்புலக் காட்டிற் பாடிவீடமைக்கும் போது அங்கே விற்களை ஊன்றி அவற்றில் அம்பறாத் தூணிகளை இட்டுத் தொங்கவிட்டிருக்குந் தோற்றத் துக்கு இந் நூலில் உவமை கூறப்பட்டிருக்கின்றது. 37-40.

**பாவை விளக்கு :** ஒரு பெண் தன் இரு கைகளிலும் ஒரு பெரிய அகல் விளக்கை ஏந்தி நிற்பதுபோல் வெண்கலம் முதலியவற்றால் உருவம் வார்த்து நிறுத்தி அதன்கண் எண்ணெயுந் திரியும் இட்டு ஏற்றுவது; நச். இதனைப் 'பொற்பாவை' என்பர். செல்வத்திற் சிறந்த தலைவியின் பள்ளியறையில் இது நிறுத்தப்பட்டிருக்கும். எரியும்போது இதன் சுடர் பெரிதாயிருக்கும். இருள் வருமுன் மாலையிலேயே இதனை ஏற்றிவைப்பர்; 85.

**பிடவம் :** இஃதொரு மலர்ச் சடி; இதன் மணம் நீண்ட தொலைவு வரையிற் கமழும். இவை காட்டில் மிகுதியாயிருக்கும். அரசர்கள் அங்கே பாசறையமைக்கும்போது இச் செடிகளை அழித்து அகலமாக இடமாக்கிக்கொள்வர்; 25.

**புண் :** போர்க் களத்திற் பகைவர் ஓங்கி வீசும் வாளால் யானைகட்குப் புண் உண்டாகும். இதனால் அவை தம் பெட்டையானைகளையும் மறந்து மிகவுந் துன்புறும்; 68 - 9.

**புதல் :** புதர்கள்; காடுகளிலிருக்கும் பசிய செடிகளின் புதர்கள். அரசர்கள் காடுகளிற் பாடிவீடமைக்கும்

போது, இப் புதர்களை அழித்து அகலமாக இடமாக்கிக்கொண்டு அதனை அமைப்பர்; 25.

சில புதர்களின்மேல் 'அதிரல்' என்னும் மோசி மல்லிகைக் கொடி படர்ந்து பூத்திருக்கும். 'படார்' எனவும், 'தூறு' எனவும் இப் புதர்கட்குப் பெயருண்டு; 51. 'மோசி மல்லிகை' என்பதன் குறிப்புப் பார்க்க.

புல்வாய்க் கலை : ஒரு வகை மானின் ஆண். இம் மான் வகை, நூலில் 'இரலை'யெனக் குறிக்கப்படுகின்றது; ஆண் மானின் கொம்பு முறுக்குள்ளதாயிருக்கும். பெட்டைமான் இங்கே மடமான் எனப்படுகின்றது. முல்லை நிலத்தைச் சார்ந்த, வரகு பயிர் விளைந்திருக்குங் கொல்லைகளில் தம் துணையுடன் தாவித் தாவி யோடும்; 99. 'வரகங் கொல்லை' என்பது பார்க்க.

புலிச் சங்கிலி : வலிவான சிறந்த படாம் வீடுகள் (கூடாரங்கள்) அமைக்கும்போது, யவனர், இப் புலிச் சங்கிலிகள் விட்டு அவற்றை அமைப்பர். பகைப்புலக் காட்டிற் பாடிவீடு அமைக்கும்போது அதன் நடுவில் அரசனுக்கெனத் தனியாக அமைக்

கப்படும் நல்ல இல்லம் இங்ஙனம் மாட்சிமையாய் அமைக்கப்படும்; 62.

புறவு : முல்லை நிலம் எனப்படுங் காட்டு நிலத்துக்கு இப் பெயர் வழங்குகின்றது. பெரிய மலைக் காடுகள் இதனினும் வேறு. இப் புறவுகளிற் காட்டாறுகள் ஓடுவதுமுண்டு. பிடவஞ் செடிகளும் வேறு பல பசுமையான புதர்களும் அங்கே வளர்ந்து கிடக்கும். நாட்டுக்குக் காவலாயுள்ள வேட்டுவர் அரணங்களும் இக் காட்டெல்லையிலிருக்கும். இக் காடுகளும் நாட்டுக்கு ஓர் அரணாயிருந்து உதவும். படையெடுத்துச் செல்லும் அரசர்கள் நாட்டிற் புகுமுன் முதலில் இக் காட்டிற் சென்று புதர்களையும் மேற்காட்டிய வேடுவர் காவற் கோட்டைகளையும் அழித்து அங்குள்ள காட்டாற்றின் கரையோரமாய்ப் பாடிவீடு அமைத்துக்கொள்வது வழக்கம். போர் நிகழும் வரையில் அவர்கள் அங்கே தங்கியிருப்பர்; 25 - 8.

இப் புறவுகளில், 'அதிரல்' என்னும் மோசி மல்லிகைக் கொடிகள் பூத்துப் படர்ந்திருக்குஞ் சிறு புதர்களுங் காணப்படும்; 51. 'மோசி மல்லிகை' என்பதன் குறிப்புப் பார்க்க.

இக் காடுகள் கார்காலத்திற் செழித்திருக்கும்: நிலம் செந்நிறமாயிருக்கும். இவற்றில் அகலமான வழிகளும் உண்டு; 97.

பேட்டையானை : போர்க்களத்திற் புண்பட்ட ஆண் யானைகள் இப் பெட்டையானைகளையும் மறந்து மிகவுந் துன்புறும்; 69.

பெருமுது பெண்டிர் : இவர்கள் பெரிய முதிர்ந்த பெண்டிர்; தலைவனைப் பிரிந்திருக்கும் இள நங்கையான தலைவி ஆறுதலாயிருப்பதற்கு இவர்கள் துணையிருப்பர். கார் காலம் வந்தும் தலைவன் வந்திலாமையால் தலைவி ஆற்றாமைப்படுதல் கண்டு, இம் முது பெண்டிர், அவ் வூரின் அருகிற் சேரிவரையிற் சென்று அவன் வருதற்கேதுவான நிமித்தங்கள் உளவாதல் தெரிந்து வந்து தலைவிக்கு அறிவித்து அவளை ஆற்றுவிப்பர். இங்கே நிமித்தமென்பது நற்சொல். நற்சொல் கேட்கச்செல்லும்போது 'நாழி' யென்னும் ஒருவகையான முகந்தளக்குங் கருவியில் நெல்லும் அரும்பவிழும் பதத்திலுள்ள முல்லைப் போதுகளும் எடுத்துக்கொண்டுபோய் அவற்றைத் தூவித் தெய்வம் வணங்கி, அது கேட்டு நிற்பர்; 8-11;

முல்லை நிலமாதலின் அவர் பரவுந் தெய்வம் 'மாயோன்' எனக் கொள்ளப்படும்.

**பொழுதறிந்து சொல்வோர் :** படையெடுத்துச் செல்லும் அரசனோடு இவர்களும் உடன் செல்வார்கள். பகைப்புலக் காட்டில் அரசன் பாடிவீட்டின்கண் தங்கியிருக்கும்போது இவர்கள் இரா நேரங்களில் நாழிகை வட்டிலின் வாயிலாகப் பொழுது இவ்வளவென்றறிந்து அரசனுக்குச் சொல்வார்கள். (பொழுதறியும் முறை இன்னதென்பது 'நாழிகை வட்டில்' என்பதன் குறிப்பினால் விளங்கும்.) இவர்கள் சொல்வதிலிருந்து நாழிகையறிந்து அரசன் படுக்கச் செல்வான்.

அரசனுக்கு இவர்கள் பொய்யாமல் நம்பிக்கையாய் ஒழுகுவார்கள்; தவறாக நாழிகை தெரிவித்து அரசனுக்கு ஊறு நேர இடந்தரமாட்டார்கள். இவர்கள் அரசனுக்கு நாழிகை அறிவிக்கும்போது அவனைக் கையாற் றொழுது வாழ்த்திப் பின் அறிவிப்பர்.

இதனாலும், நச். கூறும் உரை முறையினாலும் இங்ஙனம் நாழிகையறிவிப்பவர் பெரும்பாலும் வாழ்நாட்கள் கணக்கிடுங் கோள் நூலரா யிருப்பரென்று

தெரிகின்றது. எதிர்காலத்தில் தம் வாழ்நாள் நிலை இங்ஙனமிருக்குமென்று அறிந்துகொள்ள இயலாதவர்கட்கு அதனை அளந்து கூறும் பொய்யாத அறிவு அவர்கட்குண்டு. படையெடுத்துச் செல்லும் அரசனோடு இவர்கள் உடன் சென்று துணை புரிதலுண்டென்று இதனால் துணியலாம்; 55 - 8.

போர் : அறத்தாற் பொருகின்ற போர் 'நற்போர்' எனப்படும்; 38.

போர் வீரர் : இவர்கள் பகைமேற் செல்லும் அரசனோடு உடன்சென்று பாடி வீட்டில் தங்கியிருந்து அவ்வப்போதும் போர்க்களத்துக்குச் சென்று பொருது திரும்புவர். பகைமேற் செல்லுதற்கு அடையாள மாலையாகிய வஞ்சிமாலையை அரசனைப்போல் இவர்களும் அணிந்துகொள்வர். இவை வஞ்சிப் பூக்களால் தொடுக்கப்படும். இவற்றில் தேன் ஒழுகுமெனக் கூறுதலால், இம் மாலையை அவ்வப்போதும் புதுப் பூக்களால் தொடுத்துக்கொள்வரென்பது தெரிகின்றது.

இவர்கள் வெற்றி பெறுதலை இம் மாலைக்கு வெற்றியுண்டாக்கினோர்கள் என்று நூல் கூறும். தோல்வி

முகம் காட்டாதபடி போரை இவர்கள் வெற்றிமுக மாகத் திருத்துவராதலின், நூலில் 'வலம் திருத்தி' என வருகின்றது.

பகையரசருடைய யானைப் படைகளை வெட்டியும் தாம் உயிர் துறந்தும் வெற்றியுண்டாக்கித் தமது செஞ்சோற்றுக் கடனை இவர்கள் தீர்ப்பார்கள். 'செஞ்சோற்றுக் கடன்'என்பது பார்க்க.அரசன் இங்ஙனம் கடன் கழித்து இறந்துபட்ட வீரர்களின் அருமையை நினைந்து இரவில் துயில் கொள்ளாமற், பாடிவீட்டில் தனது பள்ளியறையில், ஒரு கையைத் தலையின் கீழும் மற்றொரு கையைப் படுக்கையின் மேலும் வைத்துப் படுத்துப் பெரிதும் கவலையுள்ளவனாயிருப்பான்; 71 - 2.

மணியொலி : அரசன் மாளிகையிற் பல காரணங்களுக்காக மணியொலிப்பதுண்டு. பகைப்புலக் காட்டில் அரசன் தங்கும் பாடி வீட்டின்கண்ணும் இம்முறைமை மேற்கொள்ளப்படும். அரசன் பணிகள் அடங்கிவிடும் நள்ளிராப் போதில் இம் மணிகளை எறிந்துவிடுவது மரபு என்று நச். உரைக்கின்றார்.

இனிப், பாடிவீட்டில் தங்கியிருக்கும் யானை குதிரை முதலியவற்றின் மணிகளும், அவை உறங்கிவிடுதலின், அந் நள்ளிரவில் ஓசையடங்கிக் கிடக்கும் என்பர்; 50.

மணி விளக்கு: இதனை நச். 'மாணிக்கமாகிய விளக்கு' என்றார். பகைப்புலக் காட்டில் அமைந்த பாடிவீட்டின்கண், அதன் நடுவில் அரசனுக்கெனத் தனியாக அமைந்த கூடாரத்தின் பள்ளியறையுள், இம் மணிவிளக்கு வைக்கப்படும். மாணிக்கத்தின் இயல்பான ஒளியே, விளக்கொளிபோல், நல்ல வெளிச்சந் தருமென்று தெரிகின்றது; 63-4.

மயில்: இதன் உடம்பில் அம்பு தைப்பதானால் அஃது எவ்வளவோ நடுங்குமென்று நமக்குத் தோன்றும். இது, தலைவனைப் பிரிந்து அப் பிரிவாற்றாமையால் நடுங்குந் தலைவிக்கு இந் நூலில் உவமை கூறப்படுகின்றது; 84.

மலை : இதற்குக் 'கோடு' என்னும் பெயர் வருகின்றது; இது மேகங்களுக்கு இருப்பிடமாயிருக்கின்றது; 5.

மழை : இது மேகம்பெய்ய உண்டாகின்றது. கார் காலத் துவக்கத்தில் மாலைக் காலங்களில் மிகுதி யாய்ப் பெய்யும். மழைக்குப் 'பெயல்' எனவும் பெய ருண்டு. ஆகலால் அக் கார்காலத்து மாலை நோக்கு மழை 'பெரும்பெயல்' எனக் கூறப்படுகின்றது; 6.

பெரும்பாலும், பயிர்கட்கு வேண்டிய காலத்தில் மழை பெய்யும்; வரகு முதலியவை அவ்வப்போது பெய்யும் மழையினால் விளையும் பயிர்களேயாம்; 98,

எதிர் காலத்திற் பெய்யச் செல்லும் மழை வெண் ணிறமாயிருக்கும். இங்கே மழையென்றது மேகம். இது சிறு திவலைகள் சொரியும். இங்ஙனஞ் சொரியு நாள், முன்பனிக் காலத் தொடக்கம் என்பர் நச் 100.

மழைத் திவலை : நூலிற் 'சிதர்' எனக் கூறப்படுகின் றது. இத் திவலைகள் கார்காலத் துவக்கத்திற் காற் றோடு கலந்து வீசும்; 52.

மா : திருமகள்; இப் பிராட்டியாரைத் திருமால் தமது மார்பில் வைத்திருக்கின்றார்; கைகளால் தாங்கியிருக்கின்றார்; 2.

'மா' என்பது 'மாமை நிறம்' என்னும் பொருளிலும் வருகின்றது. 'மாயோய்' என்பதற்கு 'மாமை நிறத்தையுடையோளே' என்று நச். உரைப்பர். தலைவனைப் பிரிந்த வருத்தத்தால் தலைவிக்குத் தோன்றும் பசலை நிறமே அது; 21. நாருரித்த ஆம்பற்றண்டின் நிறம்போல்வது.

**மால் :** திருமால்; இவர், தம் கைகளிற் சங்கு சக்கரம் தாங்கியிருக்கின்றார். அக் கைகள் பெரியவை. அவற்றிற் சங்கு சக்கர இரேகைகளும் உண்டு. தமது மார்பில் திருமகளை வைத்திருக்கின்றார். ஒருகால் இவர், மாவலி வார்த்த நீர் தங் கைகளிலிருந்து ஒழுகப், பெரிய உருவமாய் உயர்ந்தார். அப்போது இவ் வுலகமெல்லாம் தம் திருவடிகளில் அடக்கிக் கொண்டு நிமிர்ந்தார். திருமாலின் இந்தத் தோற்றம், உலகத்தை வளைத்துக்கொண்டு மழைநீர் ஒழுக உயர்ந்துசெல்லும் மேகத்துக்கு இங்கே உவமையாய் வருகின்றது. திருமால் முல்லை நிலத்துக்குரிய தெய்வம்; 1 - 5.

**மாலைக் காலம் :** இது சிறுபொழுதுகளுள் ஒன்று. முல்லை நிலத்தில் இம் மாலைப் பொழுது சிறக்கும்.

கார்காலத்தில் வரும் மாலைக்காலமே அந் நிலவியல் புக்கு இன்னுஞ் சிறப்பாம். ஆகவே, 'கார்கால'மென்னும் பெரும்பொழுதும், அக் காலத்தில் வரும் 'மாலைக் கால' மென்னுஞ் சிறுபொழுதும் முல்லை நிலத்துக்கு உரியவை என்ப. பிரிந்த காதலர்க்கு இம் மாலைநேரம் மிகவும் வருத்தஞ் செய்யும். சிறுபொழுதாயிருப்பதனாலும் இங்ஙனம் வருத்தஞ் செய்வதனாலும் இது, 'சிறு புன் மாலை' யெனக் கூறப்பட்டது; 6.

மான் : வரகு கொல்லைகளில் தன் துணையுடன் துள்ளியோடும்; 99. 'வரகங் கொல்லை' யென்பது பார்க்க.

மிலேச்சர் : இவர்களை 'அசார வாசிகள்' என்று நச். கூறுகின்றார். அரசன் இவர்களில் ஊமைகளாயிருப்போரைத் தனது பள்ளியறையின் புறத்திற், காவல் புரியும்படி நிறுத்துவன், அரசன் படையெடுத்துச் செல்லும்போதும், பகைப் புலக் காட்டில் அமைக்கும் பாடி வீட்டில் அவன் துயில்கொள்ளும் பள்ளியறைக்கு முன் அறையில், இவர்கள் காவல் புரிந்து கொண்டிருப்பரென்பது இங்கே காட்டப்படுகின்

றது. இவர்கள் ஊமைகளாயிருத்தலின், ஏதேனுங் குறிப்பிடவேண்டின் நாவினால் உரைக்க இயலாத வர்களாய்த் தம் உடம்பின் அசைவுகளாற் குறிப்பிடு வர். உடம்பிற் சட்டையிட்டிருப்பார்கள். இங்கே சட்டைக்குப் 'படம்' என்பது பெயராக வருகின் றது; 64-6.

**மூக்கோல் :** 38. 'பார்ப்பார்' என்பது பார்க்க.

**முரசு :** வெற்றிக் களிப்புத் தோன்றப் பாடி வீட்டில் இம் முரசு முழங்கும். இது கேட்டுப் பகையரசர் நடுங்குவர்; 79.

**முல்லை :** இதன் மலர் நல்ல மணமுள்ளது; கார் காலத்து மலர். 'முல்லை நிலம்' எனப்படும் காடுகளிற் பெருவாரியாகக் காணப்படும். அரும்பு அவிழ்ந்து மலரும் மாலைக் காலத்தில் இம் மலரை நெல்லோடு தூவித் தெய்வம் வணங்கிப் பெரிய முதிர்ந்த பெண் டிர் விரிச்சி கேட்டு நிற்பர். அரும்பு அவிழும் நிலை யில் இவற்றை நாழியிற் கொண்டுபோதலுண்டு; 8-10.

**மூள் மதில் :** பகை நாட்டின்மேற் படையெடுத்துச் செல்லும் அரசர்கள், அந் நாட்டின் புறத்தேயுள்ள

காடுகளில் இறங்கி அங்குள்ள செடிகொடிகளை அழித்துப் பாடிவீடு அமைக்கும்போது, பாதுகாவலுக்காக அதனைச் சூழ முட்களை வெட்டியிட்டு மதில் வளைப்பர். இங்ஙனங் காட்டு முட்களால் இடப்படும் மதிலே இங்கு 'முள் மதில்' எனப்பட்டது; 27.

**மெய்காப்பாளர் :** படையெடுத்துச் செல்லும் அரசனோடு இவர்களும் உடன் சென்று பகைப்புலக் காட்டில் அமைக்கும் பாடிவீட்டில் இராப்போதிற் காவல் செய்யுஞ் செயல் இங்கே கூறப்படுகின்றது. இவர்கள் ஆடையால் தலைக்கட்டுக் கட்டியிருப்பர். ந௪. இதனை 'மயிர்க்கட்டு' என்பார். இவர்கள் தமதுடம்பிற் சட்டையிட்டிருப்பார்கள்; உயர்ந்த நல்லொழுக்கமுடையவர்கள். தம் அரசற்கு நம்பிக்கையாய் ஒழுகுவார்கள். நூலிற், 'பெருமூதாளர்' எனப்படுகின்றனர். 'பெரிது முதிர்ந்த அறிவான காவலாளர்' என்று பொருள்படும். இதனால், நீண்ட காலமாக மற்றக் காவல் தொழில்களிற் பழக்கப்பட்டு அறிஞராய் நன்கு தேறிய நம்பிக்கையுடையோரே

இம் மெய் காப்பாளர் தொழிலில் அமர்த்தப்படுவ ரென்று துணியலாம்.

பாடிவீட்டில் இரவில் நெடுநேரம் கண் விழித்திருந்து அரசனைப் பாதுகாத்தலால், ஒரோவொருகால் இவர்கள் தூக்க மயக்கத்தோடு அசைந்தசைந்து நடப்பர். இத் தோற்றத்துக்கு, அக் காட்டின் மோசி மல்லிகைக் கொடிகள் பூத்துப் படர்ந்துள்ள சிறு புதர்கள் சிறு மழைத் திவலையோடு மெத்தென வீசுங் காற்றுக்கு அசைந்தாடுதல், உவமை கூறப்பட்டிருக்கின்றது; 51 - 4.

மேகம் : இதற்கு 'எழிலி' யென்பதும் பெயர்; இது கடல்நீரைப் பருகி வலமாக எழுந்து மலைகளை இருப்பிடமாகக் கொள்கின்றது. மழைபெய்யுங் காலத்தில் விரைந்த ஓட்டத்துடன் உலகத்தை வளைத்தெழுந்து பெய்கின்றது. கார்காலத் துவக்கத்தில் மாலைக் காலங்களிற் பெருமழை பொழியும். மழைநீர் ஒழுக உயர்ந்து செல்லும் இம் மேகத்தின் தோற்றத்துக்கு, மாவலி என்னும் மன்னன் வார்த்த நீர் தம் கையில் ஒழுக உயரமாய் நிமிர்ந்து

நின்ற திருமாலின் தோற்றம் உவமை கூறப்பட்டிருக்கின்றது; 1 - 5.

எதிர்காலத்திற் பெய்யச் செல்லும் மேகம் வெண்ணிறமாயிருக்கும். செல்லும்போது சிறு திவலைகளையும் பொழியும். இங்ஙனம் மேகம் நிகழுங்காலம்'முன்பனிக் காலத் தொடக்கம்'என்பர் நச்., 100.

மோசி மல்லிகை : இது நூலில் 'அதிரல்' என்றும், உரையிற் 'புனலி' என்றுங் கூறப்படுகின்றது. இது கொடி வகையிற் சேர்ந்தது. காடுகளிற் சிறு புதர்களின்மேற் படர்ந்திருக்கும். சிறுசிறு மழைத் திவலையோடு மெத்தென அசைந்து வருங் காற்றுக்குப், பூக்கள் மலர்ந்த இக் கொடிகளும் இவையேறிய சிறு புதர்களும் அசைந்தாடும். இங்ஙனங் கூறப்படுதலால், இது கார்காலத்து மலர் எனத் தெரிகின்றது. இவை அசைந்தாடுந் தோற்றம், அரசன் பகைப் புலக் காட்டில் அமைத்திருக்கும் பாடிவீட்டில், இரவில் அவன் மெய்காப்பாளர் கண்விழித்திருந்து காவல் செய்யும்போது, தூக்க மயக்கத்தால் அவர்களுடம்பு அசைந்தசைந்து சாய்தற்கு உவமை கூறப்பட்டிருக்கின்றது; 51 - 4.

**யவனர் :** இவரை நச். 'சோனகர்'என்பர். கிரேக்கர்க்கும் யவனர் என்னும் பெயருண்டு. இவர்கள் இடுப்பிற் கட்டியிருக்கும் ஆடையின்மேல், குதிரைச் சவுக்கு வளைந்து கிடக்கும். அதற்கேற்றபடி அதனை இடையிற் செருகியிருப்பர். ஒரு பக்கமாய் அச் சவுக்கு மறையும்படி இடுப்பின்மேல் அவர் ஆடையின் விளிம்பு மடிந்து வீழ்ந்திருக்கும். அந்த ஆடை செறிந்திருக்கும். அதனால் அது தோற்றத்துக்குப் பெரிதாய்த் தெரியும். இத்தகைய உடைக்கு, அஃது ஆண் மக்கள் உடையாயினும் 'புடைவை'யெனப் பெயர் வழங்குவதுண்டென்பது நச். உரையினால் தெரிகின்றது. இவர்கள் தம் உடம்பிற் சட்டையிட்டிருப்பர். இச் சட்டை 'மெய்ப்பை' எனப்படுகின்றது. 'மெய்ப்பை புக்க யவனர்' என்னுங் குறிப்பால் இவர்கள் அணியுஞ் சட்டை உடம்போடு இறுக்கமாயிராமல், இவர்கள் அதனுட் புகுந்திருப்பதுபோல் தளர்வாய், மிக நீளமாயிருக்குமெனத் துணியலாம். இவ் வகைகளாலும் பிற இயற்கையமைப்பினாலும் இவர்கள் தோற்றம் காண்பார்க்கு அச்சம் வருதற் கேதுவாயிருக்கும். இயல்பாகவே இவர்கள் உடம்பு

வலிமை வாய்ந்தது; கட்டமைந்தது. மேலும், மிடுக்குடையவர்கள்; நச். தறுகண்மையுடையவர்கள் என்பர். பகைமேற் செல்லும் அரசன் பகைப்புலக் காட்டிற் பாடிவீ டமைக்கும்போது அதன் நடுவில் அரசனுக்கென்று அமைக்கும் இல்லத்தை இவர்கள் புலிச் சங்கிலி விட்டு மிக மாட்சிமையாக அமைப்பர். அரசன் அந்த நல்ல படாம் இல்லத்திலேதான் (கூடாரத்திலே) தங்கியிருப்பான். வலிய கயிற்றாற் கட்டப்பட்டு ஏற்ற சுருக்குகளமைந்த திரைகளாலான அழகிய பள்ளியறைகள் முன்னொன்றும் உள்ளொன்றுமாக இதன்கண் உண்டு; 59 - 64.

யானை : இதன் கன்னங்களில் மதநீர் ஒழுகும். இதற்குக் கண்கள் சிறியவை; இதன் கொம்புகளின் நுனி கூர்மையாயிருக்கும். படையெடுத்துச் செல்லும் அரசர்கள் பகைப்புலக் காட்டில் அமைக்கும் பாசறைக்கண், தழைகள் வேய்ந்த கூரையறைகள் ஓர் ஒழுங்காயமைந்துள்ள தெருக்கள் ஓரிடத்திலிருந்து பல பக்கமாய்ப் பிரிந்து செல்லும் நடுவிடத்தில், இந்த யானைகள் காவலாக நிறுத்தப்பட்டிருக்கும். இந்த நடு இடம் இங்கே 'கவலை முற்றம்' எனக் குறிக்கப்

படுகின்றது. 'கவலை' யென்பது பல வழிகள் பிரிந்து செல்லும் இடம். தெருக்கள் ஒன்று கூடும் முற்றம் என்றுரையாமல் இங்ஙனம் பிரிந்து செல்லும் முற்றம் என்று உரைக்கப்படுதலாற் பாடி வீட்டினுள் நுழைவார், முதலில் இம் முற்றத்துக்கு வந்து அதன் பின்பே பல தெருவுகட்கும் பிரிந்து செல்வரென்று தெரிகின்றது. ஆகவே, அங்கே யானைகள் காவலாக நிறுத்தப்பட்டன; 29 - 31.

பாடிவீட்டில் யானைப் படைகள் தங்கியிருக்கும், நள்ளிரவில் அவை உறங்கிவிடுதலால் அப்போது அவற்றின் மணியோசையும் அடங்கிக் கிடக்கும்; 50. பாடிவீடு அமைதியாயிருக்கும்.

போரில் எதிர்ப்பக்கத்து வீரர்கள் ஓங்கி வீசும் வாள் சில நேரங்களில் யானைகளின்மேல் அழுந்தி விடும். அதனாற் புண்மிகுந்து, வருத்த மிகுதியாற் பெட்டை யானைகளையும் மறந்து பெரிதுந் துன்புற்றுக்கொண்டிருக்கும். இக் குறிப்பினால் ஆண் யானைகளையே அரசர்கள் போரிற் பயன்படுத்துவது வழக்கமெனத் தெரிகின்றது. புண்பட்டமையால் இவை படுந் துன்பத்தை நினைந்து அரசன் மிக்க இரக்க

முடையவனாய்ப், பாடிவீட்டில் தனது பள்ளியறை யில் ஒரு கையைத் தலையின் கீழ் ஊன்றியும் மற் றொரு கையைப் படுக்கையின்மேல் வைத்தும் படுத் தபடியாய்க் கவலையால் நெடுநேரம் துயில்கொள் ளாமலிருப்பான்; 68-9.

இனி, இப்பக்கத்து வீரரும், போரில் எதிர்ப் பக் கத்தவர் யானைகளின்மேல் வாள் வீசுவர். சில வேளைகளில் அவ் யானைகளின் பருத்த தும்பிக்கை கள் துண்டாய் வெட்டுண்டு விழுந்துவிடும். அப் போது அக் கைகள் பாம்பு துடிப்பதுபோல் துடிக் குமெனக் கூறப்படுகின்றது; 69-70.

**யானைக் கோட்டு** : இக் கொம்பின் நுனிகள் கூர்மை யானவை; சில வேளைகளில் யானை, தன் துதிக்கை யை இக் கொம்புகளின்மேல் தொங்கவிட்டுக்கொண் டிருக்கும்; 34.

**யானைப் பாகர்** : இவர்கள் யானை பழக்குஞ் சொற்க ளன்றி வேறொன்றுங் கல்லாதவர்கள்; இளைஞர்கள்; யானையைக் குத்துங் குத்துக்கோல்களை வைத்திருப் பார்கள். அவற்றின் நுனி, பிளவுபட்ட முள்ளுள்ள தாயிருக்கும். யானை உணவுகொள்ளாம லிருக்கும்

போது அதனைக் குத்துக் கோல்களாற் குத்தியும் வடமொழியிற் பழக்கிய யானைப் பேச்சுகளாற் பல தடவை அதட்டியுங் கவளங் கவளமாக உண்பிப்பர்; 33-6.

யாழ் : இதன் நரம்பொலி ஒருவகை வண்டுகளின் குரல்போலிருக்கும்; 8.

வஞ்சி : பகைமேற் செல்வதன் அடையாளமாக, இப் பூக்களால் தொடுக்கப்பட்ட மாலையை அரசனும் அவன் மறவரும் அணிந்துகொள்வர். இவற்றில் தேன் ஒழுகும்; 71. அரசனுக்கு ஒளிதரவல்லது; 78. 'போர்வீரர்' என்பதன் குறிப்பும் பார்க்க.

வடமொழி : 35 'யானைப் பாகர்' என்பது பார்க்க.

வண்டு : வண்டுகளில், யாழின் நரம்பொலிபோல் ஒலிக்கும் ஓர் இனம் உண்டு. அவை கூட்டமாய்ச் சென்று 'முல்லை' முதலான மலர்களின் தேனை நச்சி மொய்க்கும்; இசைக்கும்; 8.

வணக்கம் : அரசனுக்குப் பொழுதளந்து சொல்வோர், அவனைக் கைகூப்பி வணங்கிப் பின்பு சொல்வார்கள்; 55-6.

வரகங் கொல்லை : இது, வரகு பயிர் விளைந்திருக்குங் கொல்லை. 'வரகு' என்பதன் குறிப்புப் பார்க்க. முல்லைக் காட்டைச் சார்ந்தது. இங்கே மழை மிகுதியாகப் பெய்தலால், இளமான்கள் தண்ணீரும் புல்லும் நிறையப்பெற்று மகிழ்ச்சியால் இக் கொல்லைகளில் தம் துணையுடன் புணர்ந்து திரியும்; துள்ளியோடும். பகைமேற் சென்ற அரசன் வெற்றிபெற்றதும், தன் தலைவியின் நினைவோடு இவ் வழியே விரைவாய்த் திரும்பிவரும்போது, இக் காட்சி அவன் வேட்கையைப் பின்னும் மிகுவிக்கும். 98.

வரகு : இஃது அவ்வப்போதும் பெய்யும் மழையினால் விளையும் பயிர். முல்லை நிலத்தின் சார்பான கொல்லைகளில் விளையும். வெண்ணிறமான மேகம் சிறு மழைத் துளிகளைச் சிதறுகின்ற முன்பனிக் காலத் தொடக்கத்தில் இது விளைந்த கதிருள்ளதாயிருக்குமென்று நச். கூறுகின்றார்; 98, 100.

வலம்புரி : இதனைச் சங்காகிய கருவியென்றும், சங்கென்னும் இலேகையென்றுங் கூறுப. இரண்டும் திருமால் கைகளிற் காணப்படும்; 2.

வழி : காடு செழித்த முல்லை நிலத்தில் அகலமான வழிகளும் உண்டு. பகைமேற் சென்ற அரசன் போரில் வெற்றிபெற்றுக் குதிரைகள் பூட்டிய தேரில் தனது பெரும் படையுடன் களிப்போடு வரத்தக்கபடி அவ்வளவு அகலமாகவும் இவ் வழிகள் அமைந்திருக்கும்; 97.

வள்ளி : இஃது ஒரு வகைக் கொடி. இது காடாய் அடர்ந்திருக்கும். 'வள்ளியங் காடு' எனவே நூலில் வருகின்றது. கார் காலத்தில் இதன் காய் முற்றும்; 101. 'வள்ளிக் காடு' என்பதும் பார்க்க.

வள்ளிக் காடு : வள்ளிக் கொடிகள் அடர்ந்துள்ள காடு. இது முல்லை நிலத்தைச் சேர்ந்தது. இது முல்லைநிலத் தூர்கட்குச் சற்றுத் தொலைவில் இருக்கும். இதன் காய் கார்காலத்தில் முற்றும்; 101.

வளையல் : இது 'வளை' எனக் கூறப்படுகின்றது. இளமகளிர் தம் முன் கைகளில் அணிந்திருப்பர். தலைவனைப் பிரிந்திருக்கும்போது பிரிவாற்றாமையால் தலைவிக்கு உடல்மெலிந்து வளை கழலும். உலகியல் நடைபெறுதற்குத் தலைவனு ஒரோவொருகாற் பிரியவேண்டி யிருக்குங் கட்டாயமும் அவன் திரும்

பிவரும் வரையில் அவன் சொற்படி தான் ஆற்றியிருக்கவேண்டிய கடமையும் நினைந்து தலைவி தன்னை ஒருவாறு தேற்றிக்கொண்டு, கழலும் வளைகளையுங் கையிற் செறித்துவைக்க முயல்வாள்; 82.

**வாய்ப்புள் :** கருதிய கருத்துக்கு நிமித்தமாய்ப் பிறர் வாயிற் பிறக்கும் நற்சொல்; 18.

**வாழ்த்து :** அரசனுக்குப் பொழுதளந்து சொல்வோர், அவனுக்கு வாழ்த்துக் கூறிப் பின் அதனை அறிவிப்பர்; 55 - 6.

**வாள் :** போரிற் பயன்படுத்துங் கருவி. இதனை யானைப் படைகளின்மேல் ஓங்கி வீசுவர். அவற்றின் தும்பிக்கை முதலிய உறுப்புகளை இது துண்டாய் வெட்டிவிடும். 'எஃகம்' என்பது இதன் பெயராக நூலில் வருகின்றது; 68 - 70.

**விரிச்சி :** விரிச்சி கேட்டலாவது நற்சொற் கேட்டல்; 11. ' ஆய் மகள் ', ' பெருமுது பெண்டிர் ' என்பன பார்க்க. இது தலைவன் வரவு நோக்கி இல்லத்தின்கண் ஆற்றாமைப்பட் டிருக்கும் இளநங்கையான தலைவிக்கு, அவள் தலைவன் உடனே வருவன் என்பதற்கு நன்னிமித்தமாயிற்று; 8 - 20.

**வில் :** இது வலிமை வாய்ந்தது. இதனால் இது 'வல் வில்' என்று கூறப்படும். வலிமையாவது, முறையாகப் பொருகின்ற அறப்போரிற் பின்னிடாமல் நிற்பது. அரசன் பகைப்புலக் காட்டில் அமைக்கும் பாடி வீட்டில், படைத் தலைவர்கட் கமைக்கப் படுங் கூடாரங்களிற், சுற்றிலும் இவ் விற்கள் வளைவாய் நடப்பட்டு அவ் வளைவே ஒரு பாதுகாவலான மதிலாகக் கருதப்படுவதுண்டு. அங்கே இவ் விற்களில் அம்பறாத்தூணிகளையும் இட்டுத் தொங்கவிட்டிருப்பார்கள்; 39. 'பார்ப்பார்' என்பது பார்க்க.

**வில் அரணம் :** விற்களாலான சுற்று வளைவு; 42. 'வில்' என்பது பார்க்க.

**விளக்குகள் :** பகைப் புலக் காட்டில் அரசன் அமைக்கும் பாடிவீட்டி லிருக்கும் விளக்குகள், பெரிய திரியுள்ளவை. இரவு வந்ததும் அவற்றைச் சிற்றூட்கள் ஏற்றுவர்; அதன் பின் அங்குள்ள பணிப்பெண்கள் நெடுநேரங் கண் விழித்திருந்து அவை அவியும் போதெல்லாம் தம் கைவிளக்குகளால் ஏற்றிக் கொண்டிருப்பர். அவ் விளக்குகள் ஓர் ஒழுங்காய் அமைக்கப்பட்டிருக்கும்; 48-9.

இனி, அப் பாடி வீட்டினுள் அரசன் படுக்கும் பள்ளியறையுள் 'மணி விளக்கு' வைக்கப்படுதலும் உண்டு; 63-4. 'மணி விளக்கு' என்பது பார்க்க.

**வெற்றி :** பகைமேற் செல்வதன் அடையாளமாக அணிந்துகொள்ளும் வஞ்சிமாலைக்குப் போர்வீரர் வெற்றி தருவர் எனக் கூறப்படுகின்றது; 71. 'போர் வீரர்' என்பதன் குறிப்புப் பார்க்க.

பகையரசரோடு பொருது அவரை வீழ்த்தபின் அவர் நிலங்களைக் கைப்பற்றிக்கொள்வது, அவ் வெற்றிக்குரிய செயல்; 89-90.

அரசன் வெற்றிபெற்றவுடன், அவன் தங்கியிருக்கும் பாசறையிற் பகையரசர் நடுங்கும்படி வெற்றி முரசம் முழங்குவர்; 79.

பின்பு, அவன் அவ் வெற்றி தோன்றத் தன் நாட்டுக்குத் திரும்பும்போது, வெற்றிக்கொடி உயர்த்தி எடுக்கப்படும்; அவ் வெற்றிக் களிப்புக்கு ஒப்ப ஊது கொம்பும் சங்கும் ஒலிக்கும்; 91-2.

**வெற்றிக் கோடி :** பகைமேற் சென்ற அரசன், வெற்றி பெற்றுத் திரும்பும்போது, வெற்றிக் கொடியை உயர்த்துவான். இது நூலில் 'வெல் கொடி' எனச்

சொல்லப்படுகின்றது. அதற்கு, உரையில் 'எக் காலமும் வென்றெடுக்கின்ற கொடி' என்றார் நச்., 91.

வேட்டுவச் சாதி : இச் சாதியைச் சேர்ந்தோர் 'வேடர்' எனப்படுவர். இச் சாதி இந் நூலில் 'வேடு' என்னுஞ் சொல்லாற் குறிப்பிடப்படுகின்றது. நாட்டைச் சூழ்ந்து அதற்கோர் அரணாய் வளர்ந்துள்ள காடுகளில் இவர்கள் வதிந்து அந் நாட்டுக்குக் காவலாயிருப்பார்கள். இவர்களுக்கெனத் தனியாக, வாயிலமைந்த காவற்கோட்டைகளும் அங்கே உண்டு. அக் கோட்டைகள் 'அருப்பம்' என்னுஞ் சொல்லாற் கூறப்படுகின்றன. இச் சொல்லுக்குக் 'காட்டுக் கோட்டை' என்பது பொருள்.

இவ் வேட்டுவர் அரணங்கள் பகை நாட்டின் காடுகளிலும் இருக்குமாகலின், அந் நாட்டின்மேற் படையெடுத்துச் செல்லும் அரசர், முதலில் அக் காடுகளில் இறங்கி, அங்குள்ள பிடவஞ் செடிகளையும் வேறு பல பசிய புதர்களையும் அழிப்பதோடு, இவ் வேடரின் காவற்கோட்டைகளையும் அழித்துப் பின், அங்கே 'பாடிவீடு' அமைத்துக்கொள்வர்;26-8.

# முல்லைப் பாட்டு
# உரைக்குறிப்பு அகராதி

**எண்கள் : பாட்டின் வரிக்குரியவை ;**

**சொற்கள் நச். உரையில் உள்ளவை.**

# முல்லைப் பாட்டு

## இலக்கணக்குறிப் பகராதி

எண்கள் - பாட்டின் வரித் தூரியவை;

இலக்கணக் குறிப்புகள் நச். உரையில் உள்ளவை.

ஆகுபெயர் : 'நெடுங் காழ்க் கண்டம்' என்பதிற் கண்டம், ஆகு பெயர்: 44. (கண்டம் - கூறு: கூறுபட்ட பல நிறத்தினையுடைய திரையை யுணர்த்தியது 'ஆகுபெயரால்' என்பர் மறைமலையடிகள்.)

'பாவை விளக்கில் பரூஉச்சுடர் அழல' என்பதில், விளக்கு ஆகுபெயர்: 85; விளக்கு இங்கே தகளியை உணர்த்தியது.

எச்சம் : 'அரசிருந்து பனிக்கும் பாசறை' என்பதிற், பனிக்கும் பாசறை, நோய் தீரு மருந்து போல் நின்றது; 79.

நிரைகோள்ளல் : ஒரு வேந்தன் ஒரு வேந்தனோடு இகல் கருதினுற் போர் செய்ய வேண்டுதலின், அவன் நாட்டு அந்தணர் முதலியோரைத் தன் நாட்

டின்கண்ணே அழைத்தற்கும், அதனை யறியாத ஆவைக் கொண்டுபோந்து தான் காத்தற்குமாகத் தன் படைத் தலைவரை நோக்கி அரசன் நிரையடித் தற் கேவிய வழி அவர்......நிரை கொ(ள்ளல்); 11.

நெய்தல் : நெய்தற்குரிய(து) இரங்கற் பொரு(ள்). இரங்கல் நிகழ்ந்தால் நெய்தலாம்; 21: ('ஆற்றுவிப் பார் யாருமின்றித் தனியளாயிருந்து கடலை நோக் கியுங் கானலை நோக்கியும் தலைவி இரங்குதலும், பிறர் உள்வழி அவரோடு இரங்கிக் கூறுதலும் நெய்தலொழுக்கமாம்: ......... ஆற்றுவிப்பார் உள் வழியெல்லாம் நிகழும் ஆற்றாமை 'நெய்தல்' ஆவ தில்லை' என்பர் மறைமலையடிகள்.)

பாலை : வருத்தம் மிகு(ந்தாற்) பாலையாம்; 21.

முல்லை : பிரிந்து வருந்துணையும் ஆற்றியிரு என்று கணவன் கூறிய சொல்லைப் பிழையாமல் ஆற்றியி ருந்து இல்லறம் நிகழ்த்(தும்) இயற்கை:

(ஆற்றி) இருத்தல் என்னும் பொருள்தர 'முல்லை' என்று.........கூறினர்.

(தலைப்பு விளக்கம்)

முல்லைக் குரிய(து) இருத்தற் பொரு(ள்); 21.

முல்லைக்குரிய கருப்பொருள் : *மான்*; 99.
முல்லைக்குரிய பொழுது : *காரும் மாலையும்: (கார் - கார்காலம்: மாலை - மாலைக் காலம்)*, 6.
முல்லைக்குரிய தெய்வம் : *திருமால்*; 3.
முல்லைப் பாட்டு : இருத்தல் என்னும் *பொருள்தர* 'முல்லை' என்று இச் செய்யுட்கு நப்பூதனார் பெயர் *கூறி(னார்). .........அவள் நீடு நினைந்து ஆற்றியிருந்தவழித் தலைவன் அக் காலத்தே வந்ததனைக் கண்டு வாயில்கள் தம்முட் கூறியது.*
(*தலைப்பு* விளக்கம்).
வஞ்சி : 71, 78; *அரசன்* வஞ்சி(*மாலை*) சூடி *மண் நசையால்* (பகை)மேற் செல்வன்; 11.
வற்புறுத்திப் பிரிதல் : (இறுதி விளக்கம்).
விகாரம் : 'பூந்தலைக் குந்தங் குத்தி' என்பதிற் பூந் *தலை, விகாரம்*; 41. ('பூத் *தலை*' என வருதற்குரியது *பூந்தலை என வந்தது விகாரம்*).
விரிச்சியோர்த்தல் ; ஒரு வேந்தன் ஒரு வேந்தனோடு இகல் *கருதினாற்* போர் செய்ய வேண்டுதலின், *அவன் நாட்டு அந்தணர் முதலியோரைத் தன் நாட்டின்கண்ணே அழைத்தற்கும், அதனை யறியாத*

ஆளைக் கொண்டுபோந்து தான் காத்தற்குமாகத் தன் படைத் தலைவரை நோக்கி அரசன் நிரையடித் தற் கேவியவழி அவர் அவனூரினின்றும் போய் ஒரு பாக்கத்து விட்டிருந்து அரசனுக்கு மேல் வரும் ஆக்கத்தை யறிதற்கு 'விரிச்சியோர்த்தல்' வேண்டுமென்(பது), 11; (விரிச்சியோர்த்தல் - நற்சொற் கேட்டல். )

வினைவயிற் பிரிந்தோன் மீண்டுவருதல்: 102.

---

## முல்லைப் பாட்டில் வரும்
## உவமைகள்

1 **அகங்கை**: காந்தள் மலர்களின் வடிவுக்கு உள்ளங்கைகள்: 95.

2 **அஞ்சனம்**: மை; காசாம் பூக்களின் நிறத்துக்கு மை: 93.

3 **கடல்**: மிக அகலமானதும் சேனைகளின் ஒலி மிக்கதுமான பாடிவீட்டுக்கு, அலையொலி மிக்க அகன்ற கடல்; 28.

4 **குருதி**: இரத்தம்: தோன்றிப் பூக்களின் நிறத்துக்கு இரத்தம்: 96.

5 **குவளை மலர்**: கவர்ச்சியான கண்களுக்குக் குவளை மலர்கள்; 23.

6 **திருமால்**: மழைநீர் ஒழுக உயரும் மேகத்துக்கு, மாவலி வார்த்த தாரைநீர் கையில் ஒழுக உயர்ந்த திருமால்: 1 - 6.

7 **பாம்பு**: போர்க்களத்தில் யானைகள் போர் செய்யும்போது வாள்பட்டு வெட்டுண்டு விழுந்த அவற்றின் தும்பிக்கைகள் பதைப்பதற்குப், பாம்பு பதைப்பது: 69 - 70.

8 **பொன் :** கொன்றை மலர்களின் நிறத்துக்குப் பொன்: (இங்கு உருவகமாக வருகின்றது): 94.

9 **மயில் :** தலைவனது பிரிவாற்றாமையுணர்வு தாக்க அதனால் நடுங்குந் தலைமகளுக்கு, அம்பு தைத்தலால் நடுங்கும் மயில்: 83 - 4.

10 **முக்கோலும் காவியுடையும் :** வீரர்கள் தரையில் வில் நட்டு அதன் நுனியில் அம்பறாத்தூணிகளை மாட்டிவைத்திருக்குந் தோற்றத்துக்கு, அந்தணர்கள் தரையில் முக்கோலை ஊன்றி அதன்மேல் காவியுடையைத் தொங்கவிட்டிருக்குந் தோற்றம்: 37 - 9.

11 **மோசி மல்லிகை படர்ந்துள்ள சிறு சிறு புதர்கள் :** பாடிவீட்டில் மெய் காப்பாளர் தூக்க மயக்கத்தால் அசைந்தசைந்து நடப்பதற்கு, மோசிமல்லிகைக் கொடிகள் பூத்துப் படர்ந்த சிறு தூறுகள் சிறிய தூறலோடு மெத்தென வீசும் வாடைக் காற்றுக்கு அசைந்தசைந்து நிற்பது; 51-4.

## முல்லைப் பாட்டில் வரும்

## ஒருபொரு ளிருசொற்கள்

நன்னர் நன்மொழி, 17; பருவர லெவ்வம், 21;

## ஒரு தன்மைப்பட்ட சொற்கள்

அங்கை, 95
அஞ்செவி, 89
ஆற்றுப்படுத்த, 81
இன்குளகு, 33
உண்கண், 23
உய்த்தர, 15
உவலைக்கூரை, 29
எழுநிலைமாடம், 86
ஒய்யென, 83
கண்படை, 67
கவலை முற்றம், 30
கான் யாறு, 24
செந் நிலம், 97
சொரிதரு, 87
நடுநாள், 50
பாசறை, 79
பாவை விளக்கு, 85
புலித் தொடர், 62
முக்கோல், 38
முட்புரிசை, 27
முடங்கிறை, 87
வலம்புரி, 2
வள்ளியங் காடு, 101
வன்கண், 61
வாய்ப்புள், 18
வெண்மழை, 100
வெருவரும், 60
வெல்கொடி, 91

---

குறிப்பு:— இவற்றிற்கு உரை சொற்குறிப் பகராதியிற் காணப்படும்.

# முல்லைப் பாட்டில் வரும்
# வினைச் சொற்கள்

| | |
|---|---|
| அகலுதல், 24. | 'அகல்' |
| அசைத்தல், 14. கட்டுதல்; | 'அசைத்த' |
| ,, 38. இட்டுவைத்தல்; | 'அசை' |
| அசைதல், 52. | 'அசை' |
| அசைவருதல், 52. அசைதல்; | 'அசைவந்து' |
| அமைதல், 49. | 'அமை' |
| அலமருதல், 13. சுழலுதல்; | 'அலமரல்' |
| அவிழ்தல், 10. மலர்தல்; | 'அவிழ்' |
| ,, 95. விரிதல்; | 'அவிழ' |
| அழலுதல், 85. எரிதல்; | 'அழல' |
| அளத்தல், 55. | 'அளந்து' |
| அறிதல், 55. | 'அறியும்' |

---

குறிப்பு:- இங்கே காட்டப்படும் வினைச்சொற்களும், இவற்றின் பிற் காட்டப்படும் இடைச்சொல் உரிச்சொற்களும் நீங்கலாக ஏனையவெல்லாம் பெயர்ச் சொற்களாம். அவை பெரும்பாலும் கலைக்குறிப்பு பொதுக்குறிப்பு அகராதிகளிற் காட்டப்படுகின்றன. ' ' இக் குறியிடப்பட்டுள்ளவை, வினைச் சொற்கள் நூலில் வந்த வடிவங்கள்.

| | |
|---|---|
| ஆடுதல், 51. அசைதல்; | 'ஆடு' |
| ஆதல், 42, 66. | 'ஆக' |
| ஆர்த்தல், 8. ஆரவாரித்தல்; | 'ஆர்ப்ப' |
| ,, 92. முழங்குதல்; | 'ஆர்ப்ப' |
| ஆர்தல், 96. நிறைதல்; | 'ஆர்' |
| ஆலுதல், 89. ஆரவாரித்தல்; | 'ஆலின' |
| ஆற்றுப்படுத்தல், 81. வழியிற் செலுத்துதல்; | 'ஆற்றுப்படுத்த' |
| இசைத்தல், 58. சொல்லல்; | 'இசைப்ப' |
| இடுதல், 27. | 'இடு' |
| இமிழ்தல், 4, 88. ஒலித்தல்; | 'இமிழ்' |
| இருத்தல், 79. | 'இருந்த' |
| ஈண்டுதல், 90. திரளுதல்; | 'ஈண்டு' |
| உகளல், 99. துள்ளல்; | 'உகள' |
| உடுத்தல், 37. | 'உடுத்த' |
| உண்ணுதல், 23. (கவர்தல்); | 'உண்கண்' |
| ,, 33, 74. | 'உண்ணு |
| உமிழ்தல், 48. | 'உமிழ்' |
| உய்த்தரல், 15. செலுத்துதலைச் செய்தல்; | 'உய்த்தர' |
| உய்த்தல், 15. செலுத்துதல்; | 'உய்' |
| உயங்குதல், 74. | 'உயங்கும்' |
| உயர்த்துதல், 91. எடுத்தல்; | 'உயரி' |
| உயர்தல், 86. | 'உயரிய' |

ஓடுதல், 39. பின்னிடுதல்; 'ஓடா'
,, 82. 'ஓடு'
ஓர்த்தல், 88. கருதல், ந., கேட்டல், ம., 'ஓர்ப்பனள்'
கண்படுத்தல், 67. கண்ணுறங்குதல்; 'கண்படை' என்பதில்.
கவர்தல், 18. 'கவர்ந்து'
,, 90. 'கவர்ந்த'
கவர்ந்துகொள்ளல், 19. 'கவர்ந்துகொண்ட'
கவைதல், 35. பிளவுபடல்; 'கவை'
களைதல், 21. 'களை'
கற்றல், 36. 'கல்லா'
காட்டுதல், 22. வற்புறுத்துதல்; 'காட்டவும்'
,, 63. எரியவைத்தல்; 'காட்டி'
காணுதல், 56. 'காண்கையர்'
,, 80. 'காணேள்'
;, 22. கருதுதல்; 'காணேன்'
காலுதல், 94. சொரிதல்; 'கால'
கிடத்தல், 88. 'கிடந்தோள்'
குத்துதல், 40, 41. 'குத்தி'
குவிதல், 95. 'குவி'
கூர்தல், 68. 'கூர்ந்து'
கேட்டல், 17. 'கேட்டனம்'
கைத்தல், 36. குத்துதல், ஊட்டுதல்; 'கைப்ப'

| | |
|---|---|
| மாட்டுதல், 26. அழித்தல்; | 'மாட்டி' |
| மிடைதல், 32. நெருங்குதல்; | 'மிடைந்து' |
| முடங்குதல், 87. மடங்குதல், ம., | 'முடங்கு' |
| முடித்தல், 19. | 'முடித்து' |
| ,, 53. முடியிற் கட்டுதல்; | 'முடித்து' |
| முதிர்தல், 101. முற்றுதல்; | 'முதிர்' |
| முழங்குதல், 79. ஒலித்தல்; | 'முழங்கு' |
| மூழ்குதல், 73. அழுந்துதல்; | 'மூழ்கல்' |
| மையல் கொள்ளுதல், 83. | 'மையல்கொண்டு' |
| யாத்தல், 32. கட்டிப்போடல்; | 'யாத்த' |
| வதிதல், 80. தங்குதல், ந., கிடத்தல், ம., | 'வதியுநன்' என்பதில். |
| வரித்தல், 47, வரிந்து கட்டுதல்; | 'வரி' |
| வருதல், 16. | 'வருகுவர்' |
| ,, 20. | 'வருதல்' |
| ,, 52. | 'வரல்' |
| ,, 60. | 'வெருவரு' என்பதில். |
| வளைத்தல், 1, 27. | 'வளைஇ' |
| ,, 59. | 'வளைஇய' |
| வாங்குதல், 40. வலித்துக் கட்டுதல்; | 'வாங்கு' |
| ,, 42. வளைத்தல்; | 'வாங்கு' |
| 64. ,, | 'வாங்கிய' |
| ,, 98. வளைதல்; | 'வாங்கு' |

## இடைச் சொற்கள்

# உரிச் சொற்கள்

| | |
|---|---|
| அம், 45. | 'கூந்தலஞ் சிறுபுறம்' |
| ,, 89 | 'அஞ்செவி' |
| ,, 95 | 'அங்கை' |
| அயில், 34. கூரிய; | 'அயில் நுனை' |
| அரு, 7. | 'அருங்கடி' |
| இன், 33. இனிய; | 'இன் குளகு' |
| ,, 80. ,, | 'இன் துயில்' |
| ,, 88. ,, | 'இன்...இசை' |
| இன்னே, 16. | 'இன்னே வருகுவர்' |
| இனம், 8. | 'இன வண்டு' |
| ஏர், 64. | 'ஈரறை' |
| உறு, 13. மிகக; | 'உறு துயர்' |
| எழு, 86. எழு: | 'எழுநிலைமாடத்து' |
| ஒய், 83. விரைய; | 'ஒய்யென உயிர்த்தும்' |
| ஒரு, 75-ல் இருமுறை; | 'ஒருகை' |
| ஒள், 46. ஒள்ளிய; | 'ஒள்வாள்' |
| ,, 50. ,, | 'ஒண் மணி' |
| ஓர், 43. | 'ஓர்...அகம்' |
| கடி, 7. காவல்; | 'அருங்கடி மூதூர்' |
| கவை, 35. கவர்த்த; | 'கவைமுள்' |
| குறு, 45. | 'குறுந்தொடி' |
| ,, 58. | 'குறுநீர்க் கன்னல்' |

| | |
|---|---|
| கை, 49. | 'கையமை' |
| கொடு, 5. விரைந்த: | 'கொடுஞ்செலவு' |
| ,, 15. கொடிய: | 'கொடுங்கோல்' |
| சிறு, 6. சிறிய: | 'சிறுபுன்மாலை' |
| ,, 12. ,, | 'சிறுதாம்பு' |
| ,, 31. ,, | 'சிறுகண்' |
| ,, 45. ,, | 'சிறுபுறம்' |
| செ, 97. சிவந்த: | 'செந்நிலம்' |
| செறிவு, 59. நெருக்கமான: | 'செறிவுடை' |
| தட, 2. பெரிய; | 'தடக்கை' |
| திண், 46. | 'திண்பிடி' |
| ,, 63. | 'திண்ஞாண் |
| திரு, 63. | 'திருமணி' |
| துனை, 102. விரைந்த: | 'துனைபரி' |
| நடு, 50. | 'நடுநாள்' |
| நல், 17. | 'நன்மொழி' |
| ,, 38. | 'நற்போர்' |
| ,, 62. | 'நல் இல்' |
| ,, 71. | 'நல் வலம்' |
| ,, 78. | ,, |
| ,, 94. | 'நன் பொன்' |
| நறு, 9. | 'நறு வீ' |
| நன்னர், 17. | 'நன்னர் நன்மொழி' |
| நன, 1. அகன்ற: | 'நனந்தலை' |

| | |
|---|---|
| நீடு, 82. | 'நீடு நினைந்து' |
| நெடிது, 76. | 'நெடிது நினைந்து' |
| நெடு, 24. | 'நெடும்புறவு' |
| ,, 44. | 'நெடுங் காழ்' |
| ,, 48. | 'நெடுந்திரி' |
| ,, 50. | 'நெடு நா' |
| ,, 103. | 'நெடுந்தேர்' |
| நோன், 77. வலிமை; | 'நோன் விரல்' |
| பசலை, 12. வருத்தமான, இளைய | 'பசலைக் கன்றின்' |
| பசு, 79. பசிய; | 'பாசறை' |
| பருவரல், 21. தடுமாற்றமான; | 'பருவரலெவ்வம்' |
| பரூஉ, 70. பருமனான; | 'பரூஉக்கை' |
| ,, 85. ,, | 'பரூஉச்சுடர்' |
| பல், 43. பலவான; | 'பல்...படை' |
| ,, 88. ,, | 'பல்...இசை' |
| பனி, 4. குளிர்ச்சியான; | 'பனிக்கடல்' |
| புல், 6. வருத்தமான; | 'புன்மாலை' |
| புலம்பு, 23. தனித்த; | 'புலம்பு முத்து' |
| புலி, 62. புல்லிய; என்றது, பிணைந்த; | 'புலித்தொடர்' |
| பெரு, 6. பெரிய; | 'பெரும் பெயல்' |
| ,, 11. ,, | 'பெருமுது பெண்டிர்' |
| ,, 43. ,, | 'பெரும்படை' |
| ,, 54. ,, | 'பெருமூதாளர்' |

## முல்லைப் பாட்டில் வரும்,

## தெய்வத்தை உணர்த்தும் சொற்கள்



## மக்களையும் அவர் உறுப்புகள் முதலியவற்றையும் உணர்த்துவன

## விலங்கு முதலிய சிற்றுயிர்களையும் அவற்றின் உறுப்புகள் முதலியவற்றையும் உணர்த்துவன

## செடிகொடிகளையும் அவற்றின் உறுப்புகள் முதலியவற்றையும் உணர்த்துவன

## இயற்கை நுண்பொருள்களை உணர்த்துவன

# செயற்கை நுண்பொருள்களை

## புணர்த்துவன

இசை, 8: யாழொலி, 88.
கூடல்வாயில் ஒழுகும் மழையருவியின் ஒலி
கவலை, 30: நாற்சந்தி
சுடர், 85: விளக்கொளி.
திங்கள், 100: இங்கே ஆவணி புரட்டாசித் திங்களை புணர்த்தும்போது, செயற்கை நுண்பொருளாம் தோற்றம், 60: சட்டையிடுதலால் தோன்றும் செயற்கைத் தோற்றம்
படிவம், 37: உடை: சடை முதலியவற்றால் தோன்றும் செயற்கைத் தவக்கோலம்
மொழி, 17, 35

# இயற்கைப் பருப்பொருள்களை

## உணர்த்துவன

அயிர், 92: நுண்மணலிடம்
அருவி, 87: கூடல்வாயில் விழும் நீரருவி
இடம், 86
உலகம், 1
எழிலி, 5: மேகம்
எறிநீர், 57: கடல்
கடல், 4
கல், 37: காவிக்கல்
காடு, 26: 101
கான், 24: காடு
கான்யாறு, 24: காட்டாறு
கானம், 97: காடு

## செயற்கைப் பொருள்களை

### உணர்த்துவன

# சில வகைப் பொதுப் பொருள்களை உணர்த்தும் சொற்கள்

## பழக்க வழக்கங்களை உணர்த்துவன



## மூன்றெழுத்துக்கு மேற்பட்ட சொற்கள்